REGISTERED—No. M. 108.

Highness desires me to express to Mr. Swaminatha Aiyar h[illegible] best thanks"—Sir Francis (now Lord) Knollys.

IX.] APRIL 1911. [No. 1.

ன காகிதப் பதிப்பு. பிரதி, 5 அணு. பிரதி, 6 அணு.

சந்தா விலை விபரம். ஒரு வருஷத்திற்கு ரு. 4. ஆறுமாதத்திற்கு ,, 2-2.




வைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

**DEVOTED TO PRACTICAL TRUTH AND KNOWLEDGE.**

யாரெல்லாமுடையாரறிவிலா டைய ரேனுமிலர்.-திருக்குறள். | A POPULAR NEW REVIEW AND TAMIL MONTHLY, ESTD. MAY, 1892. | கற்க கசடறக் கற்பவை கற்றபி னிற்க வதற்குத் தக.—திருக்குறள்

ATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS.

**ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.**

[ "Hitch Your Wagon to a Star"—Emerson.]

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.



[ "Our Theism is the Purification of the Human Mind"—Emerson.]

r Edition for Patrons.] [Minimum Subscription Rs. 5.

PUBLISHED BY

THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,

*Lalitalaya, Mylapore, Madras, S.* [Overland 8 Annas extra.

Annas extra.]

For the Viveka Chintamani Publishing Committee.

Edition for the people.] [Subscription Price: Yearly Rs. 4



*spirit, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti.*

# THE VIVEKA CHINTAMANI.

ESTABLISHED 1892.

The Oldest and the Best Tamil Monthly: Yearly Rs. 4.
Thick Paper Edition Rs. 5. in Advance.
Subscriptions registered by Volume only and cannot be discontinued
in the middle of a Volume.

**EDITO** — **C. V. Swaminatha Aiyar.**

**LALITALAYA, MYLAPORE.** *Madras,* S. Septr. 19

# விவேகசிந்தாமணி.

வருஷசந்தா ரூ. 4, தளமான காகிதப்பதிப்பு ரூ. 5. வாலியம் கணக்காகவே
சந்தா பதிவுசெய்யப்படும். பினங் சிங்கப்பூருக்கு 8-அணா அதிகம்.

## விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்.

ஆரிய சகோதரர்களே! விவேகசிந்தாமணி, இப்பொழுது மாதந்தோறும் ஒழுங்கா வெளியாகி வருகிறது. ஸாதாரண வருஷ முதல் மிகவும் அருமையான விஷயங்களெல்லா வெளியாகிவருகின்றன. ஸித்தர்கள் ஸாதநமுறை, யோகம், பக்தி, ஞானம் முதலான முறைகள் உபநிஷத் வாக்கியார்த்தம் இவை வெளியாகிவருகின்றன. விவேக சிந்தாம யென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளைவிக்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிறை திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம், பாஷாஞானம், நீதி போதம், வேதாந்த சாரம், சுதேச விதேச சரித்திரங்கள், மஹாத்மாக்களின் அமிருத வசனங்கள் பகவான் அர்ச்சுனனுக்குப் போதித்த நித்தியானுகூல ஸாதனங்கள், அப்போதப்போது நடக்கும் விசே ஷஸம்பவங்கள், ஆகிய இவைகள் அடங்கப்பெற்றுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் தமிழ் நாடெல்லாம் ஜ்வலித்துவருகிறது. இம்மாதாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தாதா ராகச்சேர்வதுடன் தங்கள் நேசர்களுக்கும் காட்டி அவர்களையும் வாங்கும்படிசெய்து ஆதரிக்க வேண்டுகோருகிறோம். மனிதர்களுக்கு உய்யும்வழிகாட்டி அவர்களைக் கடைத்தேறச் செய்யும் உண்மையான ஸத்குருவைப்போல விவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவிடத் துதவியாய் நின்று விவேகத்தை வளர்க்கும் குருவாய்த்தோற்றுமென்பதிற் சிறிதும் சந்தேக மில்லை. பத்திரிகையை முழுதும் படித்துக் கையொப்பக் காரர்களாய்ச் சேரவும், இதரர்களையும் அப்படியே சேரும்படி செய்யவும் கேட்டுக்கொள்கிறோம். இப்பத்திரிகையை வாங்கி வாசிப் போர் இகபர சாதனங்களிரண்டிலுந் தேறிப் பெறுவாழ்வெய்துவர். சன்மார்க்க சாதனமான பத்திரிகையென்றும் விவேக விருத்திக்கின்றியமையாததென்றும் அனேகர் அதை ஆதரித்துக் கொண்டாடிவருகிறார்கள். பத்திராசிரியருக்கும் பத்திரிகைக்கும் அர்பத்நட் கம்பெனி முழுகிப் போனதில் நேர்ந்த பெரு நஷ்டத்தால் செலவுக்குவேண்டிய அளவே காபிகளச்சிடப்படுவதால் வேண்டுவோர் உடனே யெழுதிப் பெற்றுக்கொள்ளவேண்டும். 18-வது வால்யம் முடியவுள்ள பாக்கியெல்லாம் உடனே அனுப்பிவிடவேண்டியது. பாக்கிநிலுவை V. P. P. மூலமாய் வசூல் செய்யப்படும்.

### 1911ஆு ஏப்ரல் மீ முதல் 19-வது வால்யம் ஆரம்பம்.

சி. வி. ஸ்வாமிநாதய்யர்.
பத்திராசிரியர்.

எம். கே. நாராயணஸ்வாமி ஐயர், பி-ஏ., பி-எல்.
விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரிசி

## ORDER FORM.

ஐயா,

Please enrol me as a Subscriber and send the Vivekachintamani by V. P. P. for year's subscription, viz, Rs. 4-1-0.

ஐயா, விவேகசிந்தாமணிக்கு என்னையும் ஒரு சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டு முதல் சஞ்சிகையை வருஷ சந்தா ரூபா 4-1-க்கு V. P. P. மூலமாக அனுப்பக் கோருகிறேன். தவறாமல் தபாலாபீஸில் பணங் கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பேர், தொழில், ஊர் விலாசம், போஸ்ட் இவைகளை கண்டெழுதவும்.

☞ தனிப்பிரதி ஒற்றைச்சஞ்சிகையானால் அணா 5½, இரட்டை சஞ்சிகையானால் அணா 10 அனுப்பவும்.

# THE VIVEKA CHINTAMANI

## A Monthly Tamil Magazine and High Thought Review

evoted to the Diffusion of Practical Truth and Knowledge

**Dealing with the Principles of Education. Psychology. Soul-Culture. and Ethics.**
**Adapted for Use in Homes and Schools.**

**God is Love: Knowledge is Power: AUM.**

**"Live and Learn"**—"ஓதுவதொழியேல்."

SATYAMEVAJAYATE.


**Vol. XIX.**

*(For the Tamil Year Virodikirudu.)*

***April 1911-March 1912.***


# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

அறிவுடையாரெல்லாமுடையார் அறிவிலா
ரென்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.—திருக்குறள்.


19-ம் புத்தகம்.

(விரோதிகிருது வரு.)

1911-வரு ஏப்ரல்மீ முதல் 1912-வரு மார்ச்சுமீ வரை.

PUBLISHED BY
THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,
For The Lalita Publishing Co., (Sole Agents and Managers.)
Lalitalaya, 19, Adam St, Mylapore, Madras, S.

1911-1912.




und Vol. 5.] [Unbound Vol. Rs. 4

## No. 4. For JULY 1911



### 1911-ம் ஞு ஜூலை மீ, 4-வது சஞ்சிகை.



## No. 5. For AUGUST 1911



### 1911-ம் ஞு ஆகஸ்டு மீ, 5 வது சஞ்சிகை.

## No. 6. For. SEPTEMBER 1911



## 1911-ம் வருடம் செப்டம்பர்மீ, 6-வது சஞ்சிகை.



## No. 7. For OCTOBER 1911.

[ix]

## No. 11. For FEBRUARY 1912.



## 1912-ம்௵ பிப்ரவரி௴, 11-வது சஞ்சிகை.



## No. 12. For MARCH 1912.



## 1912-ம் ௵ மார்ச்சு௴, 12-வது சஞ்சிகை.

[Vol. XIX. No. 1.

"*Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith.*"

"*Seek Truth wherever you can find it.*" *But,*

"*Make your choice and stick to it till you reach the End.*"

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE.'



அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்] [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். 19.] 1911ஆு ஏப்ரல்மீ, விரோதிகிருதுஆு சித்திரைமீ [சஞ்சிகை. 1.

# *"NUMBER IS THE LAW OF THE UNIVERSE."

## The Meaning of the New year Virodhi-krithu

"Every being according to Pythagoras represents a number, and the ultimate goal of science is to find for each being the number for which he stands. The harmony is the soul of the universe. The different beings form an ascending scale according to the degree of perfection with which they reflect the Universal Harmony.

"As number, he says, is the essence of things, so, unity, he says, is the essence of the universe. There are again two kinds of unity. First, the unity which is absolute and unopposed, the Monad of Monads and the God of Gods from which the series of numbers or beings is derived and which consequently contains and comprehends them all. Then there is a relative unity, first in the series of derived numbers which is opposed to the numbers two three etc., and naturally limited by them. Thus the opposition between the one and the many is the source of everything else. In as much as, he further asserts, everything can be reduced to numerical relativity and finally to Idea, the matter and motion of the Ionians (Philosophy based on Physics) are merely Negative, the absence of Ideal unity."—*Pihlosophy grafted on Mathematics of which Pythagoras stood as the chief exponent in the west.*

* Pythagorean Maxim.

"எண்ணும் எழுத்தும் கண்
ணெனத்தகும்."

## விரோதிகிருது வருஷம்.

"மிக்கவிரோதி விளைவுண்டு மாரியுண்டு
தக்கசிறப்புந் தனமுண்டு இக்குண்டு
உப்புப்பருத்தி யுலகத்திலே குறையும்
துப்புமிகு மாமணைச் சாஞ்சொல்"

சாதாரண வருஷத்திற்குப் பின் வருகிற வருஷத்தின்பேர் "விரோதிகிருது." † இந்தவருஷத்தின் பலன் மேலே வரைந்திருக்கிற செய்யுளிற் கண்டபடி புதுப்பஞ்சாங்கத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மிக்க விரோதத்தையே செய்யும் இந்த வருஷத்தில் விளைவு உண்டு; மழையுண்டு; சால தர்மத்துக்கேற்ற சிறப்பும் தனமுமுண்டு; இக்குண்டு; "உப்புப்பருத்தி யுலகத்திலே குறையும்;" "துப்புமிகு ஆமணக்கு ஆம்"-என்று இப்படி காலபலன் சொல் என்பது அதன் அருத்தம்.

நமக்குள்ளே ஸம்வத்ஸரங்களின் (வருஷங்களின்) பேர் அறுபது. இந்த அறுபது வருஷங்களுக்கும் ஒவ்வொன்றுக்கும் பொதுவாய் ஆறு ருதுக்கள் உண்டு; பனிரெண்டு மாசங்களுண்டு. மாசம் ஒன்றுக்குப் பக்ஷங்கள் இரண்டு: அதாவது, சுக்கில பக்ஷம், கிருஷ்ண பக்ஷம் என்பனவாம். பக்ஷத்துக்குத் திதி பதினாலு; பூர்ணிமை அல்லது அமாவாஸை சேர்த்துப் பதினைந்து. இந்த சந்திரமானம் 30 நாளுக்கும் வருஷத்தில் 360 நாள். சௌரமானப்படி வருஷத்துக்கு 365 நாள் சொச்சம். சந்திரன் ஒருதரம் பூமியைச் சுற்றிவரப் பிடிக்கும் 30 நாள் (திதி) சந்திரமானம். இப்படி 12 தரம் சந்திரன் பூமியைச்சுற்றி வரும் பொழுது, பூமியானது கிட்டத்தட்ட சூரியனைச் சுற்றி ஒருதரம் நகர்ந்தோடி விடுகிறது. பூமியானது தட்டாமாலை சுற்றுவதுபோல் தன்னைத் தானே சுற்றிக்கொண்டு சூரியனையும் சுற்றியோடி வருகிறது. சந்திரனோ பூமியைச் சுற்றிக்கொண்டே சூரியனையும் சுற்றியோடி வருகிறது. "பாம்பின் கால் பாம்புக்குத் தெரியும்" என்று சொல்கிற பழமொழிபோல் இந்த மண்டலங்கள் ராகத்துவேஷாதி ரூபமாய் விளங்கும் துருவ சக்திகள் (Polar attractions and repulsions) மூலமாய் ஒன்றுக்கொன்று ஆகர்ஷண சக்தி வாய்ந்தனவாய் சலந சக்தியைக் கிரஹித்துக் கொண்டு, தத்தம் நிலை தவறாது ஆகாசத்தில் கோளாகாரமாய் சுற்றிச் சூழ்ந்து வருகின்றன. இந்த மண்டலங்களுக்கெல்லாம் மத்தியம ஸ்தானமாயிருந்து கொண்டும் இவை யெல்லாவற்றிலும் அந்தர்யாமியாய் வியாபித்துக் கொண்டு மிருப்பது அவ்யக்தமான அக்னி மண்டலம். இந்த அவ்யக்தாக்னியின் வியக்தஸ்வரூபம் சூரியன். இந்த சூரியன் எல்லா கிரகங்களுக்கும் ஸ்திதி கர்த்தாவாய் இருப்பதினாலே அதில் அதிஷ்டானமாயுள்ள தேவதைக்கு 'சூரியநாராயணன்' என்று பேர். இந்த சூரிய காந்தியானது "இருளிலொளி"யாய் விளங்குவதனாலே, சூரிய பகவானைச் "சாயாதேவிசமேதன" என்று சொல்லி உலகத்தார் பூஜார்ச்சனை செய்துவருகிறார்கள்.

இருளில் ஒளிரும் சந்திரன் பூர்ணனாயிருப்பதால் பௌர்ணமியென்று அது விளங்கும் திதிக்குப் பேர் வந்தது. அதே சந்திரன் சூரியனோடு தோன்றும்போது ஒளிமழுங்கி விளங்காதொழிவதால் அந்தத் திதிக்கு அமாவாஸை யென்று பேர். பூர்ணிமையிலும் அமாவாஸையிலும் சந்திரன் ஸ்வயம் பூர்ணனாகவேயிருக்கிறான். ஆனால் பூர்ணிமை திதியில் இரவில் தோன்றுவதால் பூர்ணனாய்

† சென்ற சஞ்சிகையில் 'விசுவாவசு' என்றிருந்தது அச்சுப்பிழையால் விளைந்த அனர்த்தமென்று கொள்க.

கித் கொண்டும், அமாவாசையில் பகலில் தோன்றுவதால் ஒளிமழுங்கி விளங்காத்தன்மை பெற்றும் இருக்கிறான்.

சந்திரிகை (சந்திரனொளி) பூரணமாகவும் சூந்யமாகவும் விளங்குவதற்கு இரவு, பகல் என்னும் உபாதிகள் காரணமேயன்றி சந்திரனிடத்தில் ஸ்வதாவமாயுள்ள பேதமொன்றுமில்லை. இப்படி உபாதி நீக்கிப்பார்க்க வல்லோர்க்குச் சந்திரன் எப்போதும் பூரணனாகவே யிருக்கிறான். அஞ்ஞானிகள் (உபாதி ஸஹிதமாய் மட்டும் பார்க்க வல்லவர்கள்) இந்த உண்மையை (சந்திரனின் பூரணத்துவத்தை) அவன் இராக்காலத்தில் விளங்கும் பௌர்ணமி திதியில் மட்டும் கண்டுகளித்து, அவன் பகலில் (சூரியனோடு தோன்றுவதால்) ஒளிமழுங்கி விளங்கா நிற்கும் அவஸ்தையில் (உபாதி ரஹிதமாய்) காணும் சக்தியில்லாதவர்களாய் சந்திரன் தேய்ந்து போய்விட்டான் என்கிறார்கள். ஞானதிருஷ்டிக்கும் அஞ்ஞானதிருஷ்டிக்கும் உள்ள வித்யாஸம் இதுதான். ஞானி உபாதி ரஹிதமாய்ப் பார்த்ததை உபாதி ஸஹிதமாயும் பார்க்கும் சக்திவாய்ந்தவனா யிருக்கிறான். அஞ்ஞானியோ, உபாதி ஸஹிதமாய் மட்டும் பார்க்கும் சக்திவாய்ந்து உபாதி ரஹிதமாய்ப் பார்க்கும் சக்தியின்மையால் தனது ஞான சூந்யத்தை ஞேயத்தின் (அறியப்படும்பொருளின்) மேல் ஏற்றி நிர்விகாரமாயுள்ள ஞேய ஸ்வரூபத்தைச் சூந்யமாக அறிகிறான். அப்படியே தனது மனோ விகாரத்தையும் அதனாலுணரும் விரூப விசேஷங்களையும் ஞேயத்தின் மேலேற்றி ஸ்வபாவமாயுள்ள சூன்ய வெளியில் உருவெளித் தோற்றங்களைக் கண்டு மயங்குகிறான். இதற்குத்தான் நம்மவர்களில் பெரியோர்கள் 'சங்காதோஷம்' என்று சொல்வது. சமஷ்டியில் இது பாயாமலமாம். இதை குருமுகமாகச்செய்யும் உண்மைவிசாரத்தால் போக்கிக்கொள்ள வேண்டும்; இல்லாவிட்டால் "இக்குண்டு."

"அமாவாசை பூரணையாகுமவர்க்குச்
சமனாமு யிருடம்புதான்"—

என்றார் ஔவைப் பிராட்டியார். அப்படிச் சொன்னதின் உண்மையான அருத்தம் என்னவெனில், உபாதிரஹிதமாயுள்ள சுத்த முக்த ஸ்வரூபத்தைச் சாக்ஷாத்கரித்துணர்ந்த ஸ்வாநுபவ ஞான விசேஷத்தால் உபாதிரஹிதமாயுள்ள அந்த ஸ்வரூபத்தை உபாதிஸஹிதமாய்க் காணவல்லார்க்கு உயிர் உடம்பு என்கிற பேதமில்லை: இரண்டும் சமனாம். எப்படியெனில்: ஸ்வரூபஞானம் இருப்பதினாலே. இந்த ஸ்ரூபஞானம் திருஷ்டா, தரிசனம் இரண்டையும் தள்ளிப்பார்க்கும் யோகீசர்களுக்கே உதயமாகும். திரிபுடி ஞானம் சித்தித்தவனே யோகி; திரிபுடி ஸஹிதமாய் பார்க்கும் பார்வையையும் அஃதோடு பார்ப்பவனையும் தள்ளி, பார்க்கப்படும்பொருள் மாத்திரமாய் நிற்பவன் அவனே ஞானி. திரிபுடிரகிதமான தீர்க்க தரிசனம் வாய்ந்தவனுக்கு ரூபநாசமான விடத்து அரூப தரிசனம் ஸித்தித்து அதற்கும் அப்பாலாய் நிற்பானாதலால், "அப்பாலுக் கப்பாலுக் கப்பாலாய் நிற்குமவன்" பேத பாவனைகளாலே மயக்கமுறான். அவனுக்கு "அமாவாசை பூரணையாகும்"—'உயிருடம்பு" என்கிற இரண்டும் அவனுக்கு "சமனாம்."—அதாவது, ஒன்றே. ஏனெனில், அவன் அத்வைத ஞான சித்தியில் எதையும் நிர்ப்பேதமாய் நிர்மலமாய் சாக்ஷாத்கரித்து நிற்பான். இப்படிப்பட்ட மஹான்தான் அண்டபிண்ட சமத்துவத்தை யறிந்தவனாவான். இந்த அகிலாண்ட கோடி பெல்லாம் அவனுள் அடக்கமாம். அவன் தானே வாமனரூபியாய் ஒடுங்குவான்: ஒடுங்கின அவனே உலகளந்த பெருமாளாய் (த்ரிவிக்ரமனாய்) விரிவான். உபாதிபலம் எவ்வளவுதான் வாய்ந்தவனானாலுஞ் சரி, மஹாபலி சக்ரவர்த்தியைப் போல், அவனிடம் தன் பலம் குன்றி யொடுங்குவான்,

கர்வம் தலைக்கேறினுல் தலை கழுத்தில் நிற்காது. அந்த கர்வத்தை, விக்ரமனுன விசுவரூபி மஹாபலியின் தலையில் தன் காலடி வைத் தழுத்தி அவனைப் பாதாளத்துக் கனுப்பியது போல், நாபி ஸ்தானத்துக்குக் கிழேயுள்ள பாம்புகள் (நெளியும் ஸ்வபாவமுள்ள சலந சக்திகள்) வசிக்கும் பாதாள லோகத்திற் கொண்டுபோய் இருத்தி விட்டால், விரோதி கிருது''ன்வி விஷமம் அடங்கிப்போம். அகங்கார மமகாராதி சர்வங்கள் தலைக்கேறினுல் அவை மஹாபலி சக்ரவர்த்திபாய் அண்டபிண்டமிரண்டையும் ஒன்ருய் வளைத்துத் தன் வசப்படுத்தி யாளப்பார்க்கும். தலைக்கேறின கர்வத்தைப்போல் "விரோதிகிருது"—ஆத்ம க்ஷேமத்துக்கு விரோதம் செய்வது—வேறென்றில்லை. விளைவில்லா விட்டால் நான், எனது என்கிற விருத்திகளுக் கிடமின்றிப் போம். மழையில்லா விட்டால் விளைவின்றிப்போம். ஆகையால் இவ்விரண்டும் அவசியமாம். மழையும் விளைவும் உண்டானுல் "தக்க சிறப்பும் தனமும்" அவற்றை உடன்பற்றித் தானேவரும். இந்த நான்கு முண்டானுல் "கர்வம் தலைக்கேறி விடும்."—கர்வம் தலைக்கேறினுல், "இக்குண்டாம்" என்பதற்குக் கேட்க வேண்டியதில்லை. ஆகவே,

"மிக்கவிரோதி விளைவுண்டு மாரியுண்டு
தக்கசிறப்புந் தனமுண்டு, இக்குண்டு;"

என்பது வாச்சியார்த்தம் போல் தத்துவார்த்தமும் பொருத்தமுறப்பொருந்தி விளங்குகிறது என்பது ஸ்பஷ்டமாகிற தல்லவா? இப்படியே லக்ஷியார்த்தமும் பொருந்தும்.

ஐதிகமாய்ப் பார்க்கில் அப்பொழுதும் உண்மை பொருந்தும். உப்புக் குறைந்தால் உணக்கை கெடும்: உணக்கை கெட்டால் உப்புக் குறையும். "திருத்தி குறைந்தால் தவசு கெடும், பருத்தி குறைந்தால் பவிஷு கெடும்" என்பது பழமொழி. சர்வம் தலைக்கேறினு... உணக்கையும் பவிஷும் உலகத்திலே குறையுமென்பதற்குக் கேட்பானேன்? கீர்விக்குப் "பேமானி" யென்கிற பட்டம் வந்தது என்னத்திஞல்? உணக்கை கெட்ட தன்மையினுலல்லவா? அப்படியே பருத்திக்கும் பவிஷுக்கும் வஸ்திர மூலமாய் சம்பந்தமுண்டு. ஆமணக்கு (நிலக் கடலை, வேர்க்கடலை) தாமஸ புத்தியை யுண்டுபண்ணிப் பித்தம் தலைக்கேறச் செய்யுமாதலால், கர்வம் தலைக்கேறுவதற்கு உபகரணமாயிருந்து உதவ மிருதியும் வேண்டியதேயாம். இப்படியாக இந்த வருஷபலனைக் காலபுருஷனுடைய நிலைபறிந்து பஞ்சாங்கத்திற் சொல்லிய பலனும், பஞ்சாக்ஷரத்தாற் சொல்லிய தத்துவமும், ஒன்ருய்ப் பொருந்துவதைக் காட்டினேம். இனி இந்தக் காலபுருஷனை 60-நாமங்களால் குறிப்பானேனென்று சற்று விசாரிப்போம்.

இந்தக் கலியுக தர்மத்தில் மனுஷனுக்குப் பூரண ஆயுஸ் நூறு வருஷந்தான். அதற்கு மேலில்லை. இந்த நூறு வயதை "அங்ககணித" முறைப்படி பத்துக் கூறுகப் போட்டால் பத்துப் பத்து ஆகிறது. கால சக்ரமாகிய வருஷத்துக்கு ஆறுருதுக்கள் இருப்பதுபோல், இக போக சுகத்துக்குரிய ருதுகாலம் ஆறு பத்து அல்லது 60-வருஷந்தான். ஆகையால் தான் "சஷ்டிபூர்த்தி-சாந்தி" என்கிற ஸம்ஸ்காரம் ஏற்பட்டது. மனிதனுக்கு 60-வயதில் தேஹத்தைப்பற்றிய விரக தாபங்கள் சாந்தியாகின்றன. ஆயிரம் தரம் பூரணசந்திரனைத் தரிசித்தால் (80-வயசுக்குமேல்) மனேதாபங்கள் சாந்தியாகிறது: (சூக்ஷ்ம சரீரம் சாந்தியாகிறது). நூறு வயதில் மனிதன் பூரணனுகிருன். அதாவது தன் ஆத்ம தத்துவத்தை யுணர்ந்து சுபாவத்தால் அதை யடைகிருன்.

இகலோகசாதன காலமான 60-வருஷங்களையும் 60-ஸம்வத்ஸரங்களாகப் பேரிட்டார்கள்.

இவற்றிற்குப் பிரபவா முதல் அக்ஷய வரையில் பேர் விளங்குகிறது.

பூரணத்துவ மடைந்த யோகி ஒரு நாளைக்கு அஜபா மந்திரமாக, ஹம்ஸ யோகத்தால் 21,600 உசுவாஸ நிசுவாஸங்கள் உள்ளவனுயிருக்கிறான். அண்டபிண்ட சமத்துவ முறைப்படி பிண்டத்துக்கான இந்த அங்ககணிதமே அண்டத்துக்கு மொக்கும். இதில் "அங்கம்" என்பது ரேசக பூரக கும்பகத் திரயங்களோடு கூடிய உசுவாஸ நிசுவாஸ ரூபமான பிராணய யோகம் ஒன்றுக்கு அறிகுறியாக நிற்கும். கணிதம் என்பது இவற்றின் மொத்தத் தொகையான 21,600-க்குப் பேராய் நிற்கும். 320-முந்திரி (அம்சம்) சேர்ந்தால் ஒன்று என்கிற கணிதம் (கணக்கு) ஆவதுபோல், 21,600 (பிராண) வாசி (அங்கம்) சேர்ந்தால் ஒரு பூரண ரூபம் என்கிற (கும்பமுனி) வசம் ஆகிறது. கும்பமுனிக்கு சிவசமத்துவ முண்டாதலால், 21,600-ம் ஒன்றாகச் சேர்ந்த அவருடைய "வாசி" யொன்றே "சிவா" என்கிற சிவசக்தி (பிராணசக்தி) யாகிறது.

"மூவாறுமாகி நின்றாள் வித்யையொடவித்யையாம் கலைகளென்ன காம்யமென்ன!" என்னும் அந்த சிவசக்தி தானே "மூவாறுமாகின்றாள்" ஆகிறாள். "21,600" என்கிறகணித குணியையான் சிவசக்தியை (சமஷ்டிப்பிராண சக்தியை) மூன்று தரம் ஆறால் வகுத்தால் அவளுடைய சக்தி சரீரத் திரயங்களின் சங்கியைகள் வரும். $\frac{21600}{6}=3,600$; $\frac{3600}{6}=600$; $\frac{600}{6}=100$).

வாசி அங்கமாகிய (the Unit of Pranic Energy) ஒன்றைக், காலத்தில் ஏற்றி அதை வருஷமாகக் கொண்டால், 100 என்கிற எண் (கணிதம்) மனுஷ ஜன்மத்தின் பூரணயுளைக் குறிக்கும். 600 என்கிற எண் ஜீவனின் அவித்யா ஸ்திதியைக் குறிக்கும். 3,600 என்கிற எண் வித்யா நிலையைக் குறிக்கும். 21,600 பூர்ணத்துவமாகிய ஆத்மத்துவத்தைக் குறிக்கும்.

அவித்யையின் பூரண வயசான (கணிதமான) 600-ல் பத்திலொன்று: 60. இந்த அறுபதும் காமியார்த்தமானதால், ஸம்வத்ஸரங்களாக காமரூபந்தரித்து, ஜீவன்கள் காம்யபோக போக்கியங்களை யனுபவிப்பதற்குச் சாதனமாயிருந்து வருகின்றன. அந்த "காமியகலை"யின் அறுபதில் ஒரு அம்சம் இந்த "விரோதிகிருது" என்னும் வருஷமும் இதுபோன்ற மற்ற வருஷங்களுமாம்.

காமியகர்மம் நிஷ்காமியமாகும் பொழுது பந்தஹேதுவான கர்மங்கள் மோக்ஷஹேதுவாகின்றன. இந்த அர்த்தத்திலேயே சாதாரண வருஷத்துக்கு சென்ற சஞ்சிகையில் காலவர்த்தன ரூபமான வியாக்கியானஞ் செய்தோம். (ஜகமே கற்பனமாத்திர மாதலால்) மனதின் சங்கல்ப விகல்ப விசேஷங்களுக்குத் தக்கபடி ஜீவன்களின் பூர்வவாசனை பலத்தால் (கர்மசேஷம்) பலனைக் கொடுக்க, தனு கரண புவன போகங்கள் வந்து வாய்க்கின்றன. கர்மசேஷங்கள் அனுபவித்தழிந்த பின் "இருவினை நேரொப்பு நேருங்காலத்தில், திருவருள் விசேஷத்தால், குரு தரிசனமும் ஞான உபதேசமும் கிடைக்கிறது. தீக்ஷைகளில் தேறி உபதேசார்த்தனை அப்பியாசி சித்தவிருத்தி நிரோதனத்தால் மனதின் சங்கல்ப-விகல்ப ரூப விருத்திகளையெல்லாம் அடக்கியாளக் கற்றால், கற்பனமாத்திரமான ஜகம் நிர்விகல்ப-சித்தனாகிய அவனை எவ்விதத்திலும் பாதிக்கிறதில்லை. இந்த உண்மையை ஸ்வானுபவசித்தராயுணரத்தான் தானம், தவம், யோகம், ஞானம், பக்தியெல்லாம் வேண்டியிருக்கிறது. இந்த அனுபவம் ஸித்தித்துவிட்டால், எல்லாம் தனக்குத் தானேவரும். அந்த மஹாபுருஷனுக்கு சாஸ்திரம், வேதம், புராணம், இதிஹாசம் முதலிய நூல்களெல்லாம் பயனற்றவையாகப் போகின்றன. அவன் அதிவர்ணாசிரமி யென்னும், அவ

தூதன், ஆத்மன், ஆரூடனென்றும், நிர்வாண சுகி யென்றும் பலவாறாகப் புகழ்ந்து துதிக்கப் பட்டிருந்தாலும், உண்மையில் அவன் நாமரூபங் கடந்தவனாதலால் அவனுக்குப் பேர், ஊர், ஜாதி, வர்ணம், காலம், தேசம் என்கிற வியவஸ்தையில்லை—அவன் "எல்லாமாய், அல்லவுமாய்" இருந்து, தனது பூர்ணநிலை குலையாது உலகுப்ப எல்லா வேஷமும் போடுவன். எல்லாக் கர்மங்களையு மியற்றுவன். ஒட்டியும் ஒட்டாதிருந்துலகையெலாம் தன் சங்கல்ப மாத்திரத்தால் ஆட்டிவைப்பான். இவன்தான் "விரோதிகிருது"வை வென்றவன். "எண்ணுமெழுத்தும் கண்ணெனத்தகும்" என்பதில் எண்ணே கண்ணாவது எப்படி யென்பதை இதில் ஸூக்ஷ்மமாய்ச் சுட்டிக்காட்டினோம். எழுத்துக்கு உதாரணம் மற்றோர்பக்கத்தில் வரும் "விலாதாக்ஷரவர்ண மாலிகா ஸ்தோத்திரத்தில்" கண்டு கொள்க.

## ON THE STUDY OF NUMBER AND EVOLUTION OF FORM

Or

**Philosophy based on Mathematics and Physics.**

"எண்ணுமெழுத்தும் கண்ணெனத்தகும்."

"Number is the Law of the Universe"
"Evolution is the Law of Life"

(1) "எண்ணுமெழுத்தும் கண்ணெனத்தகு"மால்
மண்ணும் விண்ணும் எண்ணில் ஒண்ணே!
மண்ணே விண்ணும் விண்ணே மண்ணுமாய்
எண்ணிலொன்றாய் இலங்குஞ்சோதி.

(2) இலங்குஞ்சோதி ஏகமாய் நின்றபின்
துலங்குந்தோற்றம் பலவாய் விரியும்!
கலங்குமனத்தாற் காணருண்மையை
மலங்குவிமாந்தர்கள் எண்ணிலெழுத்திற் கண் [ணைக்காணார்.

(3) எண்ணிலெழுத்தில் கண்ணைக்காண்பார்
எண்ணில் விகற்ப மேதுங் காணார்:
கண்ணிலெண்ணைக் கற்பனை யற்றபின்
எண்ணிலெல்லா மொன்றாய்க் காண்பரே!

(4) எல்லாமொன்றாய்க் காண்பவர் கண்ணில்
எல்லாமொன்றாய் விளங்குஞ்சோதி!
எல்லாமொன்றும் ஏகாம்பரத்திலே
எல்லாமொன்று மெண்ணே கண்ணும்.

(5) கண்ணுமெண்ணே ஏகமிரண்டென்றமல்,
கண்ணுமெழுத்தும் அகத்தே யொன்றும்,
கண்ணுமெழுத்தில், "அ-உ-ம்-" உண்டு
கண்ணுமெழுத்திது மேகாக்ஷரமே.

(6) ஏகாக்ஷரமே மோனாக்ஷரமுமாம்
மோனாக்ஷரமே நாதபிந்துவுமாம்
எழுதாக்ஷரமது உயிர் மெய் யெழுத்தாம்
பழுதறப் பார்க்கில் உயிருடலொன்றும்.

(7) உயிருடலொன்றுமெழுத்தே சமலமாம்
உயிருடலொன்று மெழுத்தே ஹம்ஸமாம்
உயிருடலொன்றுமெழுத்தே துரியமாம்
உயிருடலொன்றுமெழுத்தே கண்ணும் விண்ணு [ம்.

## What Shall we talk About?

**A Series of Object Lessons—Dog.**

சீதா-மனோன்மணி.

நாய்.

சீதா:—மனோன்மணி! நாய் வர்க்கத்தைச் சேர்ந்த மிருகங்கள் எவை, எவை என்று நம் உபாத்தினி அம்மணி அன்று சொன்னது ஞியாபக மிருக்கிறதா?

மனோன்மணி:—ஆஹா! இருக்கிறது அவைகள், நாய், ஓனாய், நரி, குள்ளநரி என்று அன்று சொல்லித் தரப்பட்டது.

சீதா:—இன்று நாயைப் பற்றி ஆராய்ச்சி செய்ய விரும்புகிறேன்; நின் அபிப்பிராயமென்ன?

மனோன்மணி:—எனக்கு அது மிக்க விருப்புள்ளதே. நானும் அதற்குத் தயாரா யிருக்கிறேன்.

சீதா:—அப்படியாயின் உனக்குத் தெரிந்திருக்கும் ஜாதி நாய்களுள் ஏதாவ தொன்றைப் பற்றிச் சொல் பார்ப்போம்.

மனோன்மணி:—"வேட்டைக்காரன்" என்று கூறப்பட்டுள்ள ஓர்வித காட்டுநாயைப்பற்றி முதலில் கூறுகிறேன், கேள்.

சீதா:—வேட்டைக்காரன் என்ற அதன் பெயரே, நீ சொல்லப்போகும் விஷயம் அதிக ஸ்வாரஸ்யமாய் இருக்குமென்று காட்டுகிறதே! நீ சொல்லப் போகும் விஷயத்தைப்பற்றிக் கேட்க மிக்க ஆவலுள்ளவளா யிருக்கிறேன்.

மனோன்மணி:—நான் கூறிய நாய், நேபாளம், பப்பாப் முதலிய தேசங்களின் காடுகளில் மந்தை மந்தையாய்த் திரியும் ஓர் ஜாதியைச் சேர்ந்தது. இம்மந்தை நாய்கள், புலி, சிறுத்தை முதலிய துஷ்ட ஜந்துக்களையும் வேட்டையாடி நாசப்படுத்துவதாகக் கூறப்பட்டுளது.

சீதா:—அப்படியா! அது அவ்வாறு எங்ஙனம் செய்கிறதென்பதைச் சற்று விரித்துரைப்பாயாக.

மனோன்மணி:—இச் சாதி நாய் இயற்கையிலேயே மிக்க ஆக்குரோஷமும், காம்பீரமுமுள்ளது. ஓர் பிராணி கீழே விழுந்து விட்டால் அதைத் தொடுகிறதில்லையாம். ஓர் மிருகம் அல்லது மனிதன் ஓடிக்கொண்டிருக்கையிலேயே கடித்துப் பிடுங்கித்தின்ன வழக்கப்பட்டுள்ளனவை யென்றும், கீழே விழுந்துவிட்டால் அது ஒன்றும் செய்வதில்லை யென்ற அதன் சுபாவத்தை நன்கறிந்துள்ள மனிதர்களும் மிருகங்களும், அவைகளைக் கண்டதும் பூமியில் படுத்துக் கைகால்களைச் செத்த பிணங்களைப்போல் வைத்துக்கொண்டு விடுகிறார்கள் என்றும், அவர்கள் அப்படிச்செய்யத் தவறிவிடும் பக்ஷத்தில், உயிருடன் பிடுங்கித்தின்னப் படுவது நிச்சயம் என்றும் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

சீதா:—அப்படியா! இவ்விஷயம் ஆச்சரியகரமானதே! சிங்கம் மிருகேந்திரனென்று கேட்டிருக்கிறோம். இந்நாய் அம்மிருகேந்திரனுக்கும் அரசனாகும்போல் காண்கிறதே! தவிர அதைக் கண்டதும் பிராணிகள் பூமியில் படுத்துக் கொள்வது மேலோரைக் கண்டவுடன் சாஷ்டாங்க நமஸ்காரம் புரிவதுபோலும்! இது நிற்க, வேறு ஜாதி நாய்களைப்பற்றியும் சற்று விசாரிப்போம். வேட்டைக்காரன் என்ற காட்டுநாயைப்பற்றிக் கிஞ்சித்துத் தெரிந்து கொண்டோம். ஆனால் மனிதர்களுக்குச் சிறு வண்டிகளை இழுத்தும், பனியில் புதைந்து போகும் பிராணிகளைக் கண்டுபிடித்துக் காப்பாற்றியும், உதவிபுரிந்து வரும் ஓர் ஜாதி நாய் இருப்பதாய்க் கூறப்பட்டுளதே! அதைப்பற்றிச் சொல் பார்ப்போம்.

மனோன்மணி:—சொல்லுகிறேன் கேட்பாயாக! நீ சொன்ன நாயின் பெயர் "நியூபவுண்ட்லண்ட் நாய்." அது காணப்படும் தேயத்தினின்றும் அப்பெயரைப் பெற்றுள்ளது. இது போன்ற சுபாவமுள்ள நாய், "லாப்ரடார்" என்னும் தீபகல்பத்திலும் காணப்படுகின்றனவாம். ஆனால் இவை நியூபவுண்ட்லண்டு நாயைவிடப் பெரிதும் பராக்கிரம முள்ளவைகளுமாயிருக்கின்றனவாம்.

சீதா:—நியூபவுண்டுலண்ட நாய் மனிதர்களுக்கு எவ்வாறு உபயோகமானதென்று சற்று விரித்துரைப்பாயாக.

மனோன்மணி:—உரைக்கக்கேள்: அது தனது எஜமானன் வீட்டைக் காப்பதுடன், ஜலத்தின்மீது போக மிக்கப் பிரியமுள்ளதா யிருத்தலினின்று, ஜலத்தில் விழுந்து முழுகி இறந்து போகவிருந்த அனேக மனிதர்களைக் கரையேற்றிக் காப்பாற்றிஇருப்பது புத்தகங்களில் ஏராளமாய்க் கதை கதையாய்க் கூறப்பட்டுளது. தவிர, யஜமானன் காட்டும் வஸ்துவைக் கொண்டுவந்து

அவனிடம் கொடுக்கும்படியான அறிவு வாய்ந்த பிராணி இது.

சீதா:—சரி! இதற்கடுத்த வேட்டையாடி மனிதர்க்கு உதவி புரியும் நாயைப்பற்றிச் சற்றுக் கூறு பார்ப்போம்.

மனோன்மணி:—வேட்டை நாய்களில் அநேகவித மிருக்கின்றன. இவைகள் மோப்பத்தினால் மனிதன் அல்லது பிராணிகளைத் தரையினின்றும் தவறாமல் கண்டுபிடிக்கக் கூடியவைகள். இவ்வித நாய்களிருக்கும் தேசம் இங்கிலாந்து, ஆப்பிரிக்கா, கியூபா என்ற தீவு. இத்தீவிலுள்ள நாயை, ஸ்பானியர்கள் தாங்கள் அத்தீவைப்பிடிக்க முயலுகையில், அதன் சுதேசிகளை வேட்டையாடிக் கொல்ல உபயோகித்து வந்தார்கள். தவிர ஓர் காலத்தில் இச்சாதி நாய் ஒன்று, தன் எஜமானனை எதிர்த்த சிறுத்தை ஒன்றைக் கொன்று உயிரைக் காப்பாற்றினது கூறப்பட்டிருக்கிறது. அது சங்கிலி போட்டுக் கட்டப்பட்டிருந்த போதிலும், தன் யஜமானன் வெளியே போவதையும், பாதையில் அவனுக்கு நேரக்கூடிய அபாயத்தையும் உணர்ந்து சங்கிலியை அறுத்தோடிச் சென்று யமன் வாயினின்றும் அவனைத் தப்புவித்ததாம்.

சீதா:—மோப்பத்தினால் பிராணிகளைக்கண்டு பிடித்து வேட்டையாடும் நாய் இனங்களுள், மேற்கூறிய இனத்தைவிட வேறு இனங்களிருந்தால் கூறு பார்ப்போம்.

மனோன்மணி:—அவைகள் நரி வேட்டையாடும் நாய், முயல் வேட்டையாடும் நாய், குறிகாட்டும் நாய் என மூன்று விதமானவைகள். இவைகளுள் முதலிரண்டும் மோப்பத்தினால் நரி, முயல்களிருக்குமிடங்களைக் கண்டு பிடித்து யஜமானனுடன், மிக்க பிரியத்துடன் வேட்டையாடும். ஆனால் குறிகாட்டும் இனமோ அவ்வாறு செய்யாமல், ஓர் முயலையாவது, பக்ஷியையாவது மோப்பத்தினால் கண்டு பிடித்ததும், தனது வாலை அவைகளிருக்குமிடம் நீட்டிக்கொண்டு அசைவற்று நிற்கும். யஜமானன் வெடி தீர்த்து, தனது துப்பாக்கியைத் திரும்பவும் கட்டித்து வருமளவும் அது அவ்வாறு நின்று பிறகு வேறோர் பிராணியைத் தேடிச் செல்லும்.

சீதா:—இப்பொழுது நாம் ஆராய்ச்சி செய்யாத நாய் இனங்கள் இன்னும் எவ்வளவிருக்கின்றன?

மனோன்மணி:—வீடு காக்கும் நாய்களுள் இரு ஜாதியும், மந்தை நாயும், எலி முதலிய சிறு பிராணிகளை வேட்டையாடும் நாய் இனமும், அதிவேகமாய் ஓடி வேட்டையாடிப் பிராணிகளைப் பிடிக்கும் கொடிநாய் என்ற ஜாதி நாயும் நாம் இன்னம் ஆராய்ச்சி செய்யாதவைகள்.

சீதா:—வீடுகாக்கும் ஜாதியில் இருஜாதியுண்டு, என்றனையே. அவைகளின் பேதாபேத மென்ன?

மனோன்மணி:—ஒன்றுமிக்க பலமும் காத்திரமுமான சரீரத்துடன் கூடியதும், உரக்கக் குலைத்துத் திருடர்கள் முதலியவர்களைத் துரத்தி விடத்தக்கதும், யஜமானனிடத்தில் மிக்க அன்பு பொருந்தினதுமான ஆங்கில பாஷையில் 'மாஸ்டிவ்' என்ற பெயருள்ளது. மற்றொன்றோ, தைரியத்திலும், ஆக்ரோஷத்திலும் பெயர் பெற்றிருந்த போதிலும் நன்றியறிவுள்ளதல்ல. தன் யஜமானனைக்கூடக் கோபமூட்டப்பட்டால் அது எதிர்த்து கடித்துவிடும். இச்சாதி நாயைத்தான், எருதுகளைக் கடிக்க விட்டு வேடிக்கைபார்க்க முற்காலத்தில் வைத்து வளர்த்து வந்தார்களாம். எருதின்மேல் ஏவப்பட்டால் அது தாவிப்பாய்ந்து, எருதின் மூக்கைக் கடித்துக் கொண்டு, அது எவ்வளவுதான்

ஆட்டித் தள்ளிவிடப் பார்க்கினும் விடாமல் தொங்குமென்று ஒருவர் கூறியிருக்கிறார்.

சீதா:—நல்லது! பாக்கி இனங்களைப் பற்றியும் சற்றுக் கூறு. தெரிந்து கொள்கிறேன்.

மனோன்மணி:—இனிப்பாக்கியிருப்பது மந்தைநாய் ஒன்று, சிறு பிராணிகளை வேட்டையாடுவன ஒன்று, கொடி நாய் ஒன்று. இவற்றுள் மந்தை நாய், மயிரடர்ந்து நீண்ட, காதுகளும் முகமுமுள்ள இனம். அது இடையனுக்கு மிக்க உபயோகமுள்ளது. அதற்குத்தன் யஜமானன் ஆடுகளை நன்றாய்த்தெரியும். அது அவ்வாடுகளை வழி தப்பிப்போக விடாததுடன் ஏதாவதொருஆடு மந்தையை விட்டுப் பிரிந்து போக முயன்றால் அப்படிச் செய்யவிடாது. நரி முதலியவைகள் ஆடுகளை அடித்துக்கொண்டுபோய் விடாமல் காக்கும். தனக்குச் சேர்ந்த மந்தை ஆடு வேறு மந்தையில் கலந்து விட்டால் அதற்குத் தன்மந்தையைப் பிரித்துக் கொண்டுவர சாமர்த்தியம் உண்டு. தவிர யஜமானனது ஸகல சம்ஞைகளையும் அறிந்து கொண்டு அவன் குறிக்கும் இடங்களுக்கு மந்தையை ஓட்டிச் செல்லும்.

சீதா:—பேஷ். வெகு நன்றாயிருக்கிறது இவ்விஷயம். கொடி நாயைப்பற்றி நாம் என்ன தெரிந்துகொள்ளலாமோ தெரிவி.

மனோன்மணி:—கொடி நாய் எல்லா நாய்களைக்காட்டிலும் வேகமாய் ஓடிப்பிராணிகளை வேட்டையாடிப் பிடிக்கும். ஆனால் இதற்கு மோப்பத்தினால் பிராணிகளைக் கண்டு பிடித்து வேட்டையாடும் சக்தி மிகக்குறைவு. இது வேட்டையாடுவதெல்லாம் கண்களின் உதவியைக்கொண்டே. அது முயலைத் துரத்துகையில், முயல் திரும்பித் திரும்பி வளைந்து வளைந்து ஓடி அதனின்றும் தப்பிக்கப் பார்க்குமாம். நாயின் பருத்த உடலினால் அதுவும் அவ்வாறு செய்ய இயலாமல், நேராகப்போய்த் திரும்ப நேருகிறது. தவிர முயல் தன் இருப்பிடத்தினிடம் வந்ததும் சட்டென நிற்க, நாய் அது ஓடுகிறதென்று நினைத்து அதைப்பாய்ந்து பிடிக்க யத்தனிக்கையில் வெகு தூரம் முன்னுக்குப் பாய்ந்துவிட முயலும் தன் புதரில் புகுந்து கொள்ளும்.

சீதா.—சரி, எலி முதலிய சிறு பிராணிகளை வேட்டையாடும் நாயைப் பற்றிச் சற்று ஸம்பாஷித்து இன்று நிறுத்துவோம். நாளைக்கு நாய் இனத்தில் சேர்ந்த மற்ற மிருகங்களைப் பற்றித் தெரிந்துகொள்ள முயலவேண்டுமே ஒழிய இன்று நேரமாய் விட்டதால் முடியாது.

மனோன்மணி:—சரி அவ்வாறே செய்வோம். பாக்கியிருக்கும் இச்சாதி நாயைப்பற்றிச் சொல்கிறேன் கேட்பாயாக; எலி முதலான பிராணிகளை வேட்டையாடும்; இது அதிகமாய் வளருவதில்லை. இச்சாதியில் அநேகம் பிரிவுகள் உண்டு. ஆனால் இங்கிலாந்து ஸ்காட்லாந்து தேயத்தைச் சார்ந்த இனங்கள் தாம் மிக்க பேர் பெற்றவைகள். இந்நாய்கள் முக்கியமாய் எலி முதலான பிராணிகளை நாசமாக்க உபயோகமாகின்றன. இவைகள் தைரியமாய் பூமியைப்பறித்து, வளைகளிற் புகுந்து சென்று பிராணிகளைக்கொண்டுவரும். தவிர, இவ்வினம் தங்கள் யஜமானனிடத்தில் பக்ஷமும் விசுவாசமுமுள்ளதுடன் அனேக வேடிக்கைகள் செய்ய எளிதில் பழகும். எம். என். கணேசய்யர்

# கமலாம்பாள் சரித்திரம்.

## Study of Temple Traditions—
## ["Angam-Poombavai"]

**Worship of Sri Lalitambal*in Letter and in Spirit.**

[Gleaned from the Pervading Essence of the din and noise of the Religious Crowd Gathered at Mylapore on All Saint's Day. †]

# லளிதாக்ஷர வர்ணமாலிகா ஸ்தோத்திரம்.

திருமயிலையில் அறுபத்துமூவர் உற்சவத்தன்று கூடிய திருக்கூட்டத்தார் கோஷமாகிய சப்தத்தின் த்வனியின் அந்தர்க்கத ஜோதியிலிருந்துண்டான

"அங்கம்பூம்பாவை" யெனும்

ஆகாசமலர்க்கோத்து.

ஓம் ஸ்ரீலளிதாம்பாயை நம:

ஓம் சிவயவசி அம்பிகாசிமசிநம: ஓம்ஸ்ரீ:

"சிவாயவென்னுமக்ஷரம் சிவனிருக்குமக்ஷரம்
உபாயமென்று நம்புவோர்க்கு உண்மையான அக்ஷரம்
கபாடமிட்டவாசலை கடந்துபோகும்வாயுவை
உபாயமிட்டழைக்குமே சிவாயவைந்தெழுத்துமே."
—வாகீசர்.

சிவநேசச்செல்வர்கள் திருக்கோஷத்வநி. { "ஸாம்பஸதாசிவ ஸாம்பசதாசிவ
ஸாம்பஸதாசிவ ஸாம்பசிவா."

பீஜாக்ஷர நாமாவளி.

ஓம் (1) "ஓம்காரப்பிரிய உரசவிபூஷண
ஹ்ரீம்காராதிமஹேசசிவா." (கோஷம்: ஸாம்ப)

சி (2) "சாந்தஸ்வரூபா 'ஸ:' காரோத்தம
வாகீசுவரவரதேசிவா." (கோஷம்) [ஸாம்ப-]

வ (3) "ரிகவேதாச்ரித மௌநவிபூஷண
சந்திரார்க்காக்நி த்ரிநேத்ரசிவா." (கோஷம்)
[ஸாம்ப-]

* 'Lalitambal' is the poorna-prajnâteetha-nirmala-Nija Sakti (the Kosmic Energy of Consciousness Absolute) of which all other saktis are but integral parts.

† Which occurred at Mylapore, Madras, this year on Sunday the 12th March 1911.

ய (4) "லங்காதீச்வர சுரகணசேவித
லாவண்யாம்ருத லளிதசிவா." (கோஷம்)
[ஸாம்ப-]

வ (5) "லாளிதபக்த ஜநேசநிஜேச்வர
களிநடநப்பிரிய காமசிவா." (கோஷம்) [ஸாம்ப-]

சி (6) "தத்துவமஸீத்யாதி வாக்கியஸ்வரூபக
நித்தியாநந்த மஹேசசிவா." (கோஷம்)
[ஸாம்ப-]

அ (7) "அத்புதவிக்ரஹ அமராதீசுவர
அகணிதகணகுண அம்ருதசிவா" (கோஷம்)
[ஸாம்ப-]

ம் (8) "அம்பரவாஸ சிதம்பரநாயக
தும்புருநாரத சேவ்யசிவா." (கோஷம்)
[ஸாம்ப-]

ப (9) "பந்தவிநாசக ப்ருஹதீசாமர
ஸ்கந்தாதிப்ரிய கநகசிவா." (கோஷம்)
[ஸாம்ப-]

["மும்மூன்று மொன்ருகி யொன்றே யொன்
பதுவாகுமுன்னருமை நிருத்தமென்ன!"]

திருக்கூட்டத்தார்கோஷப்பேரலைத்வநி. { "ஸாம்பஸதாசிவ ஸாம்பஸதாசிவ
ஸாம்பஸதாசிவ ஸாம்பசிவா".

ந (10) "யதிஜநஹ்ருதயநிவாஸதயாஸ்வர
விதிவிஹ்ருண்யா சுரேசசிவா." (கோஷம்)
[ஸாம்ப-]

சி (11) "ஐசவரியாச்ரய சிந்மயசித்கண
அச்சுதாநந்த மஹேசசிவா." (கோஷம்)
[ஸாம்ப-]

["ஒன்றுபத்தா யுற்பவித்த உன்நாதர்கால்தூக்கி
யாடின தோர் ஆட்டமென்ன!"]

ம (12) "நாநாமணிகண பூஷணநிர்க்குண
நடநஜநப்பிரிய நாட்யசிவா." (கோஷம்)
[ஸாம்ப-]

["மண்டலங்கள் மூன்றுசூழ மாதேவர் கூத்தடங்க
அம்மேயுன் மாயை செய்த ஜாலமென்ன!"]

சி (13) "மந்மதநாசந மதுபானப்ரிய
மந்தரபர்வத வாஸசிவா." (கோஷம்)
[ஸாம்ப-]

நம: (14) "ஆஹாரப்ரிய ஆதிகிரீசுவர
போகாதிப்ரிய பூர்ணசிவா." (கோஷம்)
[ஸாம்ப-]

["நாலே சிவபுரமாய் நல்லவஸ்தைக் கிலக்ஷியமாய்
நாதருடல்கொண்டோர்டிநான்மறையிலொளித்ததென்ன!"]

ஓம் (15) "கமலாக்ஷார்ச்சித கைலாஸப்ரிய
கருணாஸாகர காந்திசிவா." (கோஷம்)
[ஸாம்ப-]

ஸ்ரீம் (16) "கங்கட்சகுலம்ருகடங்காத்யாயுத
விக்ரமரூப விசுவேசசிவா." (கோஷம்)
[ஸாம்ப-]

ஓம்ஸ்ரீலலிதாம்பாயைநமஃஓம்ஸ்ரீஃ

—:—.—

## திருவருட்பா.

அழுதபிள்ளைதான் பால் குடிக்குமால்
கூழுமியரே கூடிப் பாலுக் கழுவோம்;
விழுமியரே வாரும் வீணாகாதே நாம்
குழுமியே தேவியைப் பாடிக் குதிப்போம்.

"ஞானசம்பந்தா மோனஇன்பந்தா".

| | |
|---|---|
| குழுமியர்கூடிப் பழமைபாம் முறையால் பாலுக்கழல். | "சண்முகனேலோ சம்பந்தா சூரிப லாஇன் பந்தா." |

[விழுமியர்:-] [நழுமியர்-]

(1) "அம்பிகையேசிவ ஞாநயிரே
அம்புவியோர்மகிழும்பயிரே." [சண்முக-]

(2) "ஆரணியேபரி பூரணியே
நாரணியே ஜகத்காரணியே." [சண்முக-]

(3) "சங்கரியேசிவ சாம்பவியே
ஸாம்பஸதாசிவ சங்கரியே." [சண்முக-]

(4) "நாரணிமனுநீத நாயகியே
நாமகள்புகழ்லஹரி தாம்பிகையே." [சண்முக-]

(5) "ஆரணிகுணதீத குண்டலியே
வாரணிகொங்கையர் வாழ்வரசே [சண்முக-]

(6) "ரதிபதி மன்மத ரக்ஷணியே
சதிபதி சுந்தர ஸாம்பவியே." [சண்முக-]

(7) சிவகாமசுந்தரி மந்திரியே
பவரோகபந்த விமோசினியே. [சண்முக-]

(8) நவவ்யூகாந்ருத நாயகியே
சிவயோகாநந்த ஸ்வரூபிணியே. [சண்முக-]

(9) நாமகள்புகழ்லஹரி தாம்பிகையே
பூமகள்திகழ்சிவ ஸாம்பவியே. [சண்முக-]

(10) ஷண்முகசுந்தர ஸாம்பவியே
பண்முகத்திருந்தமிர் பாலிப்பையே.[சண்முக-]

[விழுமியர்] [நழுமியர்-]

(11) "அம்பிகையே சிவஞாநபிரே
அம்புவியோர் மகிழும்பயிரே." [சண்முக-]

(12) தும்புருநாரதர் பண்ணுபிரே
எம்பிரானிடைமருங் குற்றவரே. [சண்முக-]

(13) ப்ருங்கியைத்தமோட்டங் கொண்டவளே
ஹ்ரீங்காரத்தினி திருந்தவளே. [சண்முக-]

(14) ஐங்காரத்துள்ளிருக் தாட்டுவையே
ஸ்ரீங்காரசுந்தர நாயகியே. [சண்முக-]

(15) க்லீங்காரத்திருந் தாடுவையே
யைங்காரச்சிற்றம் பலநடுவே. [சண்முக-]

(16) ஓங்காராக்ஷரப் பெண்மயிலே
டாலகஸஹயஃ ஸாம்பவியே.[சண்முக-]
[எல்லாரும்:-]

(17) மயிலையில் தவம்புரி மாதவியே
கயிலையில் சிவபுரத் தாள்குநவே.[சண்முக]

(18) கருணைக்கடலே கார்முகிலே
கருணைக்கழு'ரேம் கண்திறவே! [சண்முக-]

திருவிருத்தம்.

விழுமியர் மெய்விதிர்ந் தாடவுங்
குழுமியர்கூடிக் குணக்குன்றைப் பாடவும்,
தொழுமன்பர் கவிதீரக் கழுக்குன்ற தேனை
யழுக்கறுத் தாண்டவம் மடமயிலாள்,
குழுமியர்கூட்டத் திடைநிறுத்திக் குறைபறுத்துப்
பழமையாங் குணங்குறி பலகாட்டி,
விழுமியசம்பந்த னடிகூட்டியவளுள்ளன்பால்
முழுமோனவிருந்திட்டாள் கபாலீச்சுரமமர்
[கற்பகமே

—:-:—

## "The Ancient Eternal Symbols of Mystic Union."

## "பழமையாங் குணங்குறி.*"

### ப்ரஹ்மாத்மைக்கியச் சிறப்பிலக்கணம்.

—:-:—

(திருவிருத்தங்களில் வரும் சிலவாச்சியார்த்தங்களுக்கு லக்ஷியார்த்தம்)*

(1) "அன்னையே" யாமவள் ஆதியாய் நின்ற அறிவருவாலே
பின்னையு மன்னைபே யருட்சாந்தி பெற்றவர்.

* As given in the commentary of Vadi-kesari Azhagiya Manavala-Jiyar &c. See Siddanta Dipika Vol XI, No. 7.

(2) "புதுமணப்பெண்ணும்" பேரன்புவெள்ளம்
போதுமணமகளிராம் பேரருளாளர்.

(3) "தோழியே"யாமவர் தூயசிந்தையினால்
குழுமியே துவம்தனைக்†கோன்வழிச்சேர்ப்பர்.

(4) "மணமகளே"யாம் மருவிலாக்கடவுள்
குணமகனுயினும் குறைவிலாச்செல்வனும்.

(5) "தூதே"யாமவன் தூய்நெறிகாட்டுவன்
வாதேசெய்திடார் வான்வழிப்பட்டோர்.

(6) "கண்ணொளியழகது" உள்ளொளிகாட்டிடும்
விண்ணொளிவேதாந்தப் பொருளிடத்தன்பினால்.

(7) "கொங்கையழகது" குறைவிலாபக்தியால்
அகங்கைநெல்லிபோல் அன்பினைக்கண்டு
மங்கையர்முயக்கென மருவியணைந்துபின்
கொங்கைகள்சோரக் கொழுநனைத்தழுவிய
குலமகளொழுக்கா யுள்ளுணர்காதல்
வெள்ளம்பெருகி விம்மியெழுதலாம்.

(8) "நுண்ணியசிற்றிடை" யாவதும்
எண்ணியபற்றுடை பந்தங்களை தலாம்.

(9) "நடையழகாவதும்" நன்னெறிபற்றியே
யுள்ளத்தொழுகலாம்.

(10) "கூந்தலழகதும்" குணக்கடலண்ணலைக்
குனிந்து வணங்குந் தலைநெறியொழுக்காம்.

(11) "உடையழகாவது" முண்மைநெறிபற்றி
இடையறாப்பத்தியால் சிரத்தைபூண்டொழு
[கலாம்.

(12) "சொல்லழகாவது" ஸ்வயம்புவைப்போற்று
[மோர்
வில்லழகானவரகவிதானுய் வாக்கிலுதிப்பதாம்.

(13) "கைவளை"யாவதும் கங்கணந் தரிப்பதும்
மெய்வளையானையே மனமொழி மெய்களால்
பெய்வளைபோலுள்ளத் துவந்துதரித்துமே
செய்வளையிட்டானைச் செயலினுற்போற்ற
[லாம்.

(14) "இருளை"னப்புகல்வது மருளுடைச்சிந்தையே.

(15) "தென்றல்,வாடையும் தெரிவுடை அன்றிலும்"
என்று சொல்லும் இயல்புடைத் தோற்றங்கள்
என்றுந்துன்பே இயல்பா வுடையதோர்
நன்றில்நாமரூபபேதமாம் இந்த்ரியநுகர்சுக
[மென்றேயுணர்க.

(16) "இரவும் பொழுதும் புலர்ந்திலை" யென்பது
விரவுமன்பர் வேட்கைப் பிணியினுல்
இரவுபகலில்லா விடத்தைச் சேர்வான்
அல்லும்பகலும் அதுவேசிந்தையாய்
விரவிச் செல்லுமோர் தீவிரதாத்தினுல்.

(17)பக்குவமானோர்க்குப்பரசுகநல்கலொப்பிலா ஒருவன்
உவந்துவந்திலனல் 'ஒழியாவழியேகழியா இரவே'
எனக்கரைந்துருகுவருணரிதுகாமன்கணையாம்.

(18) உள்ளத்துறைப்ரஜ்ஞானமெழுந்தபின்
கள்ளமனமுற்றுங்கரைந்திலதானதால்
வெள்ளம்போலெழுவெண்ணிலாவதனின்
வேதனையுரைப்பர் உள்ளுறையன்பனைக்காணுக்
[குறையினுல்.

(19) ஞானதித்தன் உதித்தது கண்டவர்
மோனதிக்கிய சாந்தியை நாடுவர்.

(20) "கடலின்பேரொலி" யெனவேகூறுவர்
பிரணவப்பொருளின் குணத்வனிதன்னை.

(21) தசமியிலே சாகரத்துக் கப்பாலேறிச்
சிலம்பொலியும் ஆம்பிகைதன் பாதங்கண்டோர்
அன்பேயின்பும்இன்பேயன்புமாபிலங்குஞ்சோதியால்

(1) கண்கள்தானு கவரப்பெறுவார்;
(2) ஹிருதயாகர்ஷணி யிழுக்கப்பெறுவர்;
(3) இச்சாசக்தியும் நிச்சயந்தானும்;
(4) உறக்கந்தானும் பறக்குமவர்முன்;
(5) ஊனுடம்புலர்ந்து வெளுக்கும் அப்பா!
(6) மாயைமயக்கென எல்லாம்வெறுப்பர்.
(7) ஆத்மபுத்தியினுல் சித்தமும்பித்தமாம்.
(8) பொறிபுலனொடுங்கும் புந்திபின்காந்தியால்.
(9) மூர்ச்சையாகியே ஸமாதியெய்துவர்;
(10) சித்தம்செத்துச் சின்மயம்தானுவர்.

தத்தமறிவில் தோன்று முண்மையால்
சித்தமிறக்கக் கற்றவர்காணும் குறியிது
பத்தும் என்றுணர்ந்துள்ளே யூக்கங்கொள்வாய்!
நததமிலழகிய மணவாளஜீயர் மொழியிது!
சுத்தமனத்தினர் சுகம்பெறச் சொன்னுன் சொன்
அத்தனருளால் சொன்னதைக்கேட்டுணர் [னேன்
சத்தியினுலே சொல்லைத் தள்ளிச்சொல்லினுள்ளுறை
சுத்தப்பொருளைக் காண்பவர் சுகம்பெறுவாரே.

——:-:——

† துவம்தனை = துவம்பத வாச்சியார்த்தலக்ஷியமான அந்தராத்மாவை.

ஓம் ஸ்ரீசாவித்திரியை நமஃ

# உபநிஷதர்த்த தீபிகை.

## 10. ஆருணிகோபநிஷத்.

———:-(o)-:———

(1) [உப] ஆருணி யென்பவர் பிரஜாபதியின் லோகத்திற்குப்போய் அவரை (=பிரஜாபதியை) யடைந்து கர்மங்களெல்லாவற்றையும் எதனால் தள்ளலாம் என்று கேட்டார். அவரை (ப்பார்த்து) பிரஜாபதி சொன்னதாவது:-உன் புத்திரர், சகோதரர், பந்துக்கள், முதலானவர்கள், சிகை,(=குடுமி),யஞ்ஞோபவீதம்,யாகம், சூத்திரம், (வேதமுதலிய)அத்தியயனம் இவைகளையும், பூலோகம்,புவர்லோகம்,சுவர்லோகம், மஹர்லோகம், தபோலோகம், சத்தியலோகம் இவைகளையும், அதலம், பாதாளம், விதலம், சுதலம், ரசாதலம், தலாதலம், மஹாதலம் இவ்வகைகளையும்,பிரஹ்மாண்டத்தையும் தள்ளவேண்டும்; தண்டத்தையும் (=கோலையும்) ஆச்சாதனத்தையும் (மாத்திரம்) கிரஹித்துக்கொண்டு மற்றவைகளைத் தள்ளவேண்டும்.

[குறிப்பு:—'சூத்திர' மென்பது யாகம், கிருஹ்யம் முதலியு விஷயங்களைச் சொல்லும் சாஸ்திரங்கள்; ஆபஸ்தம்பர், போதாயனர், கௌதமர் முதலியவர்களால் செய்யப்பட்டன. தண்டம் என்பது மூங்கில்கோல். இது மாடு, சர்ப்பம் முதலியவைகளை விலக்குவதற்காக உபயோகப்பட்டது. 'ஆச்சாதனம்' என்பது இரண்டு கௌபீனத்தையும், போர்வைக்காக ஓர் கந்தைத்துணியையும் குறிக்கும். இவ்வுபநிஷத் குடீசகம், பஹூதகம், ஹம்ஸம், பரமஹம்ஸம் என்கிற நால்வகை சந்நியாசங்களுள் சகலபரித்தியாக ரூபமான பரமஹம்ஸத்தைச் சொல்லும். இச்சந்நியாசங்களும் வித்வத் சந்நியாசம் (அதாவது ஞானோதயமான பிறகு சந்நியாசம்,) விவிதிஷா சந்நியாசம் (அதாவது ஞானமுண்டாகும் பொருட்டு செய்துகொள்ளும் சந்நியாசமென)இருவகைப்படும். இவ்விடம் சொல்லப்பட்ட கதையானது ஞானத்தைத் துதிக்கும் பொருட்டு வித்வத் சந்நியாஸத்தைச் சொல்கின்றது. இவ்விஷயங்களை நாரதபரிவிராஜகோபநிஷத்தில் பார்க்கவும் .இதன் பிறகு இச்சந்நியாசத்திற்கு அதிகாரிகளானவர்களும் அதன் வேறு விசேஷங்களும் சொல்லப்படுகின்றன.]

(2)[உப]:கிரஹஸ்தனாகவாவது,பிரஹ்மசாரியாகவாவது, வானப்பிரஸ்தனாகவாவது (இருக்குமொருவன்) லௌகிகாக்னிகளை (தன்) உதராக்னியில் ஆரோபணம் செய்து, காயத்திரியையும் தன் வாக்காகிய அக்னியில் ஆரோபணம் செய்து, யஞ்ஞோபவீதத்தை பூமியிலாவது ஜலத்திலாவது விட்டுவிட வேண்டியது.* குடீசகன் பிரஹ்மசாரி இவர்கள் குடும்பத்தை விடவேண்டியது: பாத்திரத்தை விடவேண்டியது: பவித்திரத்தை விடவேண்டியது: தண்டங்களையும் லௌகிகாக்னிகளையும் விட வேண்டியது - என்று சொன்னர்

[குறிப்பு.—"லௌகிகாக்னி" லோகங்களையடையக்காரணமாகும் சிரௌத ஸ்மார்த்தாக்னிகள்; என்றால், யாகம் அக்கினி ஹோத்திராதிகளைவிட வேண்டும். ஸந்நியாசம் செய்துகொள்பவன் விதிப்படி ஸந்நியாசத்துக்கு முன் செய்யவேண்டிய அதன் அங்கமாகிய இஷ்டியைச் செய்து பிறகு பரமஹம்சன் அக்னிகார்யங்களை விடவேண்டியவனாதலால், அவ்வக்னியை தன்னுடைய ஜாடராக்னியில் ஆரோபணம் செய்ய வேண்டியது. நாராயணர் இக்கிரியையை 'ஸம்பகக்னே' என்றாரம்பிக்கும் மந்திரத்தால் செய்யவேண்டுமென்றும், சங்கரானந்தர் மூன்றுதடவை ஜலத்தைப் பானம்செய்து 'பாதெஅக்னெ' யென்கிற மந்திரத்தால் செய்ய வேண்டுமென்றும் சொல்கிறார்கள். காயத்திரி

*உபவீதத்தையும் சிகையையும் பூமியில் விட வேண்டியதென்றும் பாடமுண்டு.

மந்திரத்தை தன் வாக்காகிய அக்கியில் ஆரோபணம் செய்வது, ஜபங்கள் வாக்கினிடம் உத்பத்தியாவதாலும், வாக்கு அக்னியில் உத்பத்தியாவதாலும், ஜபத்தையதன் காரணத்தில் லயப்படுத்துவதைக்குறிக்கும். ஆகவே காயத்திரியுடன் சகல ஜபங்களேயும் அப்படியே லயம் செய்ய வேண்டியதென்பதைக் குறிக்கும்.

காயத்திரியை 'பூ: ஸாவித்ரீம் ப்ரவிஸாமி' முதலிய மந்திரங்களாற் செய்யவேண்டியது. உபவீதத்தை (பூநூலை) "பூ: ஸமுத்ரம் கச்ச ஸ்வாஹா" என்றுசொல்லி ஜலத்திலாவது பூமியிலாவது எறிந்துவிடவேண்டியது. "குடீசகன்" என்பவன் சன்னிபாசியாகியும் சிகை யஞ்ஞோபவீதங்களை எடுக்காமல் தன் பிள்ளை அல்லது பந்துக்கள் வீட்டில் சாப்பிடுவோன். சன்னியாசிகள் குடீசகன், பஹூதகன், ஹம்சன், பரமஹம்சன் என நால்விதமாக பிக்ஷுகோபநிஷத்திலும், துரியாதீதன், அவதூதன் எனச்சேர்த்து அறுவகையாக நாரதபரிவிராஜகோபநிஷத்திலும் பிரித்துச் சொல்லியிருக்கின்றது. இதன் விபரத்தை ஆங்கும் மனு முதலிய ஸ்மிருதிகளிலும் பார்க்கலாம். 'குடீசகன்' என்பது பஹூதகன் ஹம்சன் என்பவர்களேயும் குறிக்கும். "பிரம்மசாரி" என்பது கிரகஸ்த வானபிரஸ்தர்களேயும் குறிக்கும். 'தண்டங்களை' என்பதில் பன்மை குடீசகன் முதலியவர்கள் த்ரிதண்டத்தை தரிப்பதால், அம்முத்தண்டத்தையும் பரமஹம்ஸன் விட வேண்டுமென்பது பொருள்.]

(3) [உப] அதன் பிறகு மந்திரமில்லாதவனாய் (ஸ்நாநம் ஆசமநம் முதலியவைகளை) ஆசரிக்கவேண்டும். ஊர்த்வகமனத்தை விடவேண்டும். மூன்று சந்திகளுக்கு முன் ஸ்நாநம் செய்யவேண்டும். சந்தியை (சந்தபாகால சம்பந்தமான சந்தியாவந்தனம் முதலிய கர்மங்களை) சமாதியில், ஆத்மாவினிடமே ஆசரிக்க வேண்டும். சகலவேதங்களிலும் ஆரண்யகத்தை ஆவர்த்தனம் (அத்தியயனம்) செய்யவேண்டும். உபநிஷத்தையே ஆவர்த்தனம் செய்ய வேண்டும்.

[குறிப்பு:—"ஊர்த்துவகமனம்" என்றால் மேற்செல்லுதல் என்பது பதார்த்தம். அதற்கு பூர்லோக முதலியலோகங்களின் வாசனை யென்று நாராயணரும், மேன்மை அல்லது வித்யை பணம் முதலியவைகளால் உயர்ந்த சம்பாத்தியம் என்று சங்கரானந்தரும் பொருள் சொல்கிறார்கள். சந்தியாவந்தனம் முதலிய கர்மங்களை சமாதியில் ஆத்மாவினிடம் அநுஷ்டிப்பதென்பது "ஜீவப்பிரஹ்மஐக்கியவிருத்தி" ரூபமாகிய சமாதியனுபவத்தால்பரமாத்மாவினிடம் மௌன நிலையாகிய நிஷ்கர்ம பாவத்தையடையவேண்டுமென்பதைக் குறிக்கும். சந்நியாசிக்கு கர்ம காண்டாநுஷ்டானம் இல்லாததால் வேதத்தில் ஞானகாண்டமாகிய ஆரண்யக பாகமும் அதிலும் உட்பாகமாகிய உபநிஷத்துக்களுமே பாராயணம் பண்ணத்தக்கவை. ஏனெனில், ஆரண்யக பாகத்திலும் சிலவிடங்களில் கர்மத்தைப் போதித்தால் அப்பாகத்தை விடுத்து ஞானார்த்தத்தைச் சொல்லும் உபநிஷத்துக்களையே அத்தியயனம் செய்ய வேண்டும். ஏனெனில், சந்நியாசமே உபநிஷத்தின் பொருளாகிய ஞானத்தை அறியவும் அடையவும் வேண்டியே ஏற்பட்டது.

இவ்விதம் யஞ்ஞோபவீதத்தையும் தள்ளி பிராஹ்மண கர்மங்களையும் விட்டு இருக்கும் சந்நியாசியை எவ்விதம் பிராஹ்மணனென்று சொல்லக்கூடுமென்பதற்கு பின்வரும் வாக்கியம் உத்தரமாகும்—

(4) [உப] பிரஹ்மமாகிய நானே சூத்திரமல்லவா? சூசனத்தால் (ஊன்றுவிக்கிறபதால்) பிரஹ்மமே சூத்திரம் (நூல்). அச்சூத்திரம் நானே (பிரஹ்மத்தை) அறிந்தவன் மூன்று சுற்றுள்ள சூத்திரத்தை (யஞ்ஞோபவீதத்தை) விட்டுவி

டவேண்டும். (அப்படியே) இவ்விதமறிந்தவனும் (விடவேண்டும்.)—

[குறிப்பு.—தானே பிரஹ்மசுவரூபமாய் சூத்திரத்தைப்போல் (வஸ்திரத்திலுள்ள நூலைப்போல்) ஊடுருவி நிற்பதால், தானே சூத்திர ரூபமானபிறகுவேறுவெளிப்படையான யஞ்ஞோபவீதமாகிய சூத்திரம்அநாவசியம். பிரம்ஹத்தை சூத்திரம் என்று சொல்வது ஜகத்தை வஸ்திரமாக உருவகப்படுத்தி எவ்விதம் வஸ்திரத்தின் உபாதான காரணமாகிய நூலும் வஸ்திரமும் அபேதமோ, அவ்விதம் ஜகத்தும் பிரஹ்மத்தைத் தவிர உண்மையில் வேறல்லவென்பதைக் காட்டும். கடைசிவாக்கியம் சங்கரானந்தர் உரைப்படி மொழிபெயர்த்திருக்கின்றது. அவர் உரைப்படிக்கு மேல்உபநிஷத்வாக்கியம் வித்வத் சந்நியாசம் விவிதிஷாசந்நியாசம் இரண்டையும் குறிக்கும். வித்வத் சந்நியாசம் என்பது ஒருவன் ஞானநுபவம் வந்த பிறகு செய்துகொள்வது. "இவ்விதம் அறிந்தவன் மூன்று சுற்றுள்ள சூத்திரத்தை விடவேண்டும்" என்னும் வாக்கியம் வித்வத் சந்நியாசியைக் குறிக்குமென்றும், "(அப்படியே) இவ்விதமறிந்தவனும் (விடவேண்டும்)"என்கிற வாக்கியம் விவிதிஷா சந்நியாசியைப்பற்றிச் சொன்னதாகுமென்றும், சங்கரானந்தர் அபிப்பிராயம். விவிதிஷா சந்நியாசமென்பது ஞானனுபவமுண்டாகுமுன்னரே உண்மையை யறியவேண்டுமென்னும் விருப்பத்துடன் செய்துகொள்ளும் சந்நியாசம். நாராயணர் முழுவாக்கியத்தையும் வித்வத் சந்நியாசியையே குறிக்குமென்று அபிப்பிராயப்படுகிறார்.

(5) [உப] ஸ்ந்யஸ்தம்மயா, ஸந்யஸ்தம்மயா, ஸந்யஸ்தம்மயா, என மூன்று தடவை சொல்லி, சர்வபூதங்களுக்கும் அபயம், என்னிடமிருந்து சர்வமும் பிரவர்த்திக்கின்றது.

[குறிப்பு.—சந்நியாசம் என்கிற பதத்திற்கு நன்றாய் விடுதல் என்று பொருள். "ஸந்நியஸ்தம்மயா" வென்பதற்கு 'என்னால் நன்றாய் விடப்பட்டது' என்று பொருள். இம்மந்திரத்திற்கு பிரைஷமந்திரமென்று பெயர். இதை ஒவ்வொருதடவையும் பூஃ, புவஃ, ஸுவஃ என்கிற வியாஹ்ருதிகளில் ஒன்றொன்றுடன் சேர்த்து மந்த்ர, மத்திய, தார சுவரங்களால் மூன்று தடவை உச்சரிக்கவேண்டும். மூன்று தடவை உச்சரித்தல், தான் மூன்று லோகங்களையும் விட்டவனுதலால் அம்மூவுலகங்களும் தனது சங்கல்பத்தைக் கேட்கவேண்டி ஏற்பட்டது. ஏனெனில், ஸந்நியாசியானவன் எப்பொழுதாகிலும் மூவுலகங்களில் எவ்விஷயத்திலாவது ஆசைவைப்பானுகில் அவன் பதிதனுகி மூவுலகத்தின் பழிப்புக்காளாவான். சந்நியாசி அஹந்தையைவிட்டவனுதலால் சகல ஜனங்களுக்கும் அவனுல் நன்மையுண்டாமே யல்லாது அவன் அவைகளுக்குக் கெடுதல் செய்யமாட்டானுதலால் அவன் அவ்வாக்கியங்களால் அபயம் கொடுக்கின்றான். சகல ஜகத்திற்கும் காரணபூதமான பிரஹ்மம் தானே என்கிற ஞானத்தால் சகல ஜகத்தையும் தனக்கு அநந்நியமாய்ப் பார்ப்பவனுதலால் அவன் ஒரு காலத்திலும் ஒன்றிற்கும் கெடுதி செய்யக்கூடியவனல்லன். அபய மந்திரத்தின் பிறகு "ஸ்வாஹா" என்று சேர்த்து அம்மந்திரத்தாலேயே ஜலத்தை பூர்ணாஞ்சலியாக எடுத்து வடக்கே அல்லது கிழக்கே விடவேண்டியது.]

(6) [உப] 'ஸகாமெகோபாயளஜ: ஸகாயோ ஸீந்த்ரஸ்ய வஜ்ரோஸி' என்கிற மந்திரத்தால் மூங்கில் தண்டத்தை (தடியை) (தனது வலது கையின்பேரில்) வைத்து கௌபீனத்தை கிரகிக்கவேண்டும். ஔஷதத்தைப்போல் அன்னத்தைச் சாப்பிட வேண்டும்: ஔஷதத்தைப் போல் அன்னத்தைச் சாப்பிடவேண்டும். பிரஹ்மசர்யத்தையும், அஹிம்ஸையையும், அபரிக்கிரஹத்தையும், ஸத்தியத்தையும் யத்னத்தோடு ரக்ஷிக்கவேண்டும், ரக்ஷிக்கவேண்டும்.—

[குறிப்பு.—மந்திரத்தின் பொருள் "நீ என்னை ரக்ஷிக்கும்பொருட்டு தோழன் (ஆகியிருக்கின்றாய்) ஒஜஸ் (சரீரத்தில் வீர்யத்துக்குக்காரணமானதேஜஸ்) இது பத்தாவது தாது ஆகிய தோழனுயிருக்கிறாய். இந்திரனுக்கு வஜ்ரமாயிருக்கிறாய்.']

(7) [உப] மேலும் பரமஹம்ஸபரிவிராஜகர்களுக்கு ஆசனமும் சயனமும் (படுக்கையும்) பூமியில். பிரஹ்மசாரிகளான (அவர்கட்கு) மண்பாத்திரமாவது சுரைக்குடுக்கைப் பாத்திரமாவது (தீர்த்தம் சாப்பிடுவதற்காக வைத்துக்கொள்ளலாம்.) காமம், குரோதம், லோபம், மோஹம் தம்பம், தர்ப்பம், அசூயை, மமத்வம், அகங்காரம், அசத்தியம் முதலியவைகளை விடவேண்டும். 'வர்ஷகாலத்'தில் (மழைகாலமாகிய நாலு மாதங்களில்) ஒரே யிடத்திலிருந்து மற்ற எட்டுமாசங்களில் ஏகனுய் சந்நியாசியானவன் சஞ்சரிக்க வேண்டும்; இரண்டுமாசமாவது சஞ்சரிக்க வேண்டும்.

[குறிப்பு.—பரமமாகிய ஆத்மாவே தான் என்று செல்கிறவன் அல்லது அறிகிறவன் (ஹன்=செல்லுதல், அறிதல்) பரமஹம்சன். எங்கும் (பரித:) எவற்றையும் விடுகிறவன் (வ்ரஜ்=விடுதல்) பரிவிராஜகன். பரமஹம்சனுகிய பரிவிராஜகன், பரமஹம்ஸபரிவிராஜகன். காமம் என்பது விஷயத்திலாசை. லோபம், என்பது கிருபணத்தன்மை அல்லது துக்கமாகிய சரீரத்திடம் சுத்தமென்னும் புத்தி. தம்பம் என்பது டம்பம், தான் தர்மம்செய்வோன் என்கிற பெருமை. தர்ப்பம்-சர்வம். அசூயை என்பது பிறர்மேன்மையை சகிக்காமை. மமத்துவம் சகல வஸ்துக்களையும் தன் சம்பந்தமாகவேபார்த்தல். அஹங்காரம்-ஜாதி, குண, கர்மங்களில் அபிமானம். இரண்டு மாசமாவது தனித்து சஞ்சரிக்க வேண்டுமென்பது, குருசிஷ்யராவது சமானமனமுடைய யதிகளாவது சேர்ந்து சஞ்சரிக்கலாமாதலால், அப்படி இருக்கும் பக்ஷத்தில் இரண்டு மாதமாவது பிரிந்து தனியாய் சஞ்சரிக்கவேண்டும்.']

(8) [உப] வேதத்தின் அர்த்தத்தை அறிந்தவன் எவனோ அவன் உபநயனத்திற்கு பிந்தியாவது முந்தியேயாவது முன் சொன்னவைகளையும் (காமக்குரோதாதிகளையும்) தகப்பன், பிள்ளை, உபவீதம், கர்மம், பெண்சாதி (இவைகளையும்) இன்னும் மற்றவைகளையும் விடவேண்டும். ஓம்ஹி, ஓம்ஹி, ஓம்ஹி, என்று ஜபித்துக் கொண்டு கையையே அல்லது வயிற்றையே பாத்திரமாகக்கொண்டு பிக்ஷையின் பொருட்டு சந்நியாசிகள் கிராமத்தில் பிரவேசிக்கின்றார்கள். அந்த உபநிஷத்தையே (பிரணவத்தையே) நியாசம் செய்யவேண்டும். யாதொருவன் இதை அறிகிறானே அவன் வித்துவானுகிறான்.

[குறிப்பு:-இவ்வாக்கியத்தால் இன்ன ஆசிரமத்தார்தான் சந்நியாசம் வாங்கிக்கொள்ள வேண்டுமென்றாவது, உபநயனம் ஆகியிருக்கவேண்டுமென்கிறதாவது நியமம் கிடையாதென்று ஏற்படுகின்றது. சந்நியாசம் செய்துகொள்ளப்புகுவோன் வேதார்த்தமாகிய ஜீவப்பிரம்ஹஐக்கியத்தை பரோக்ஷமாகவாவது அறிந்திருப்பதே போதுமென்று சொல்லப்பட்டிருக்கின்றது. கிராமத்தில் பிரவேசிக்க வேண்டுமென்பதால் பரமஹம்சர்கள் கிராமத்தில் வசிக்காமல் பிக்ஷையெடுக்கமாத்திரம் கிராமத்தில் பிரவேசிக்கவேண்டுமென்பது பொருள். அவர்களுக்கு தாகத்துக்கு சாப்பிடமாத்திரம் தீர்த்தபாத்திரம் வைத்துக்கொள்ளலாமென்று முன்னரே விதிக்கப்பட்டிருக்கிறது. அன்னத்தை பாத்திரமில்லாமலே கையில் வாங்கி அவ்விடமே சாப்பிடவேண்டும். அப்படி பிக்ஷைக்குப்போகும் காலங்களில் "ஓம்ஹி" என்று பிரணவத்தை ஜபித்துக் கொண்டிருக்கவேண்டும். ஹி என்பது நிச்சயத்தைக்குறிக்கும். ஆகவே மந்திரத்திற்கு சகலமும் பிரணவசுவரூபமே எனப்பொருளாகும். உபநிஷத் என்கிற பதத்திற்கு

சங்கரானந்தர் பின்வருமாறு உரையிடுகிறார். உப, சமீபத்தில், (நான் பிரஹ்மமென்று அறியும்படி பிரஹ்மத்தினிடத்தில் செலுத்தி) நி, மிகவும், (அவித்தையையும் அதன் கார்யங்களையும் சம்ஸ்காரங்களையும்) சாதயதி, நாசம் பண்ணுகின்றது எதுவோ அது உபநிஷத். ஆகவே அப்பதம் இவ்விடத்தில் பிரணவத்தைக் குறிக்கும். பிரணவநியாசத்தை பிரணவ கல்பங்களில் பார்க்கலாம் இவ்விதம் அறிபவன் பிரஹ்பாநுபவ மடைந்த வித்துவானாகிறான்.]

(9) [உப] பலாசமரத்தாலும், வில்வமரத்தாலும் உதும்பர மரத்தாலும் (செய்த) தண்டத்தையும், அஜினத்தையும் (யஞ்ஞோபவீதத்தில் கட்டும் மான்தோலையும்) மேகலையையும் (அரைஞாணையும்), யஞ்ஞோபவீதத்தையும் விட்டு இவ்விதம் அறிகிறவன் சூரனாவன். அந்த விஷ்ணுவின் பரமபதத்தை (சந்நியாசிகளான) ஞானிகள் எப்பொழுதும் (நிர்மலமான) ஆகாசத்தில் வியாபித்த கண்ணைப்போல் பார்க்கின்றார்கள்.—விஷ்ணுவின் பரமபதம் எதுவோ அதனை விப்ரர்கள் (பிராஹ்மணர்கள்) குரோதம் (முதலியவைகள்) அற்றவர்களாய் விழித்திருந்து (லோகத்திற்கு) பிரகாசிக்கச் செய்கின்றார்கள்- இவ்விதம் நிர்வாணத்தின் அநுசாஸனம் (உத்தரவு) வேதத்தின் அநுசாஸனம்.

[குறிப்பு—மூன்றுவிதமான தண்டங்களும் முறையே வைசிய க்ஷத்திரிய பிராஹ்மணர்களுக் குரித்தானவைகள். வைசிய க்ஷத்திரியர்களுக்கு சந்நியாசத்தில் அதிகாரமில்லாததாலும், பிராஹ்மணர்கள் தங்களுக்கு கீழ்வர்ணங்களின் தண்டத்தைத் தரிக்கலாமாதலாலும் மூன்றும் அவர்களுக்கே சொல்லப்பட்டதென்பது நாராயணரபிப்பிராயம். விஷ்ணு என்பது வியாபக பிரஹ்மத்தைக் குறிக்கும். ஞானிகள் பிரஹ்மத்தை யனுபவிக்கும் பிரகாரத்தை ஆகாயத்தைப் பார்க்கும் கண்ணின் திருஷ்டாந்தத்தால் காட்டுகின்றார். எவ்விதம் கண்ணானது நிர்மலமாகிய ஆகாயத்தைப் பார்க்கும்பொழுது அவ்வாகாயத்தில் ஆவரண மொன்றுமில்லாததால் விகல்பமற்று திரிசியமல்லாமல் (கண்ணுக்கு எதிரிடையாகிய தோற்றமற்று) நிர்விகல்பமாகிய பார்வை மட்டுமாக மிஞ்சிவிடுமோ அவ்விதம் பிரஹ்ம வஸ்துவையும் திருபுடியற்று திருக்கு(பார்வை) மாத்திரமாய் நின்று அநுபவிப்பார்கள் என்பது பொருள். விழித்திருந்து என்பதற்கு 'அஞ்ஞானம் நித்திரை யிவைகளில்லாமல் ஜாக்ரதையுடன் இருந்து சமாதியை யடைந்தமனதால்' எனப்பொருள். அவ்விதம் அறிந்து அப்பொருளை பிறருக்கு உபதேசிக்கின்றார்கள். நிர்வாணம் - (வாணம்=சரீரம்) அது அற்ற இடம் நிர்வாணம். வாணம்=நடக்கின்றது அல்லது துர்க்கந்தத்தை தரிக்கின்றது, அல்லது சப்திக்கிறது எதுவோ அது வாணம்; எனவே, சரீரத்தைக்குறிக்கும் ஸ்தூல சூக்ஷ்ம காரண மஹா காரண சரீரங்களற்ற விடம் நிர்வாணமாகிய மோக்ஷம்.]

மு. கோ. நாராயணஸ்வாமி ஐயர்.

## Conditions of Health and Disease.

### 1. Typhoid, Small pox and other Zymotic Pestilence.

——(o)——

'Disease is not inevitably the fate and birthright of every born child, but is in fact of our own making; it is not outside our knowledge and our power, but within our control. Filthy conditions and the imperfect removal of effete material, without and within the body, are the factors of Zymotic pestilence, which aforetime walked in darkness, but is now made plain by the revealing light of science".—Sir William Collins M. D. in "Specificity and Evolution in Disease, p. 28.

If therefore, men can only be induced to live according to the Laws of Health, and will keep themselves, their houses, and their surroundings pure, they may bid defiance to the most violent epidemic that may be raging around them.—*From Vaccine Inquires and Health Review.*

## சுக துக்க சாதனங்கள்.

——:o:——

### 1 சந்நிபாதம் அல்லது பித்தவாத சுரம், அம்மை, வைசூரிமுதலான பெருவாரிக் காய்ச்சல்கள்.



ன்பமும் துக்கமும் இன்பசுகநீழலாம். துன்பமும் துக்கமும் மனதுக்கேயன்றி தேஹத்துக்கில்லை. ஆனால் மனது தேஹத்தை அபிமானித்திருப்பதால், தேஹத்தோடொன்றுபட்டிருக்குந் தன்மையால் தேஹத்துக்குண்டாகும் கோளாறுகளால் பாதிக்கப்பட்டு அவற்றால் துன்பமும் துக்கமும் அடைவதன்றி இன்பமும் சுகமும் கூட அடைகிறது.

இன்பமும் சுகமும் சௌக்கிய ஹேதுக்களாம். துன்பமும் துக்கமும் அசௌக்கிய ஹேதுக்களாம். ஆகையால் சுகதுக்கமிரண்டும் தேஹத்தின்மேல் ஏற்றப்பட்டால் தேஹத்தின் சௌக்கியா சௌக்கியங்களைக் குறிக்கும். உயிரின் உள்ளுணர்வு பிரணவ ஸ்வரூபமாயிருக்கிறது. இந்தப் பிரணவ ஸ்வரூபமும் மாத்திரையளவாக விளங்கி "அமாத்திரையால்" சோபிக்கிறது. மாத்திரை யென்பது அகார, உகார, மகார ரூபமாய் விளங்குவது. "அமாத்திரை" யென்பது இம்மூன்றுஞ் சேர்ந்த ஒன்றன் பொருளாய் விளங்குவது. அதுவே பிரணவமென்று சொல்லப்படும் "உயிர்களின் சமஷ்டி ஸ்வரூபமாம்."

"ஓங்காரமாவது விரியுங்குவியும்
அகாரம்விரியும் உகாரம்குவியும்
மகாரம்ஒடுங்கும் மோனமுமாகும்
அகாரஉகாரமகாரமாய் நிற்பது ஓமதுவாமே."

விரிதலும்குவிதலும்விகாரமாம். இவ்விகாரமொழிந்து ஏகமாய் நிற்பது ஒடுக்கமாம். ஒடுங்கினவிடத்து ஒன்றேயாவது எங்கும் நிறைந்த பரிபூரண வஸ்துவாதல் மோனமாம். இந்த மோன உருவத்தை, "ஓமென்றோதி யுள்ளொளியாய் நிற்கும், நாமநறுங்குழற்றையலைக்கண்டபின்" என்னும் திருமந்திரோபதேசத்தினால், ஆமையைப்போல் இந்திரியஜயம்செய்த மந்திர திருஷ்டாக்கள் அகார, உகார, மகாரங்களை அமாத்ரை கூட்டி "ஓம" என்றோதி, "உள்ளொளியா" தரிசனஞ்செய்வர் என்பது ஸ்பஷ்டமாய் விளங்குகிறது. இப்பொழுது நாம் கவனிக்கவேண்டியது என்னவென்றால், உயிரின் உணர்வின் லக்ஷணங்கள் விரிதல், குவிதல், ஒடுக்கம் என மூவகைத்தாமென்பதே. அதில் ஒடுக்கம் இருவகைத்தாம்.

"விரிந்துரை மாண்டது" ஒரு ஒடுக்கம். இதுவே "ஒழிவிலொடுக்க"மென்றும் சொல்லப்படும். இதற்கு எதிர்மறையாய் "குவிந்துரைமாண்டது" ஒரு ஒடுக்கமாம். இதைக் "கழிவிலொடுக்கம்" என்று நாம் சொல்வோம். ஏனெனில் இந்த ஒடுக்கத்தில் கட்டின துணியைக் கழித்து விடுவதுபோல, ஆத்மா(அறிவு) தேஹேந்திரியங்களின் அழிவு காலத்தில் அதைக்கழித்துத் தான் ஜீவோபாதியிலொடுங்கி நிற்கும். ஜீவோபாதியாவது அவித்தை அல்

லது அறியாமை. "அறிவு". "அறியாமை"யி லொடுங்கினல் அது பந்தத்துக்கு (பிறப்பிறப்புக்கு) ஹேதுவாகும். "அறியாமை" அறிவிலொடுங்கினல் அது மோக்ஷத்திற்கு ஹேதுவாகும். முன்னதைச் சாகும்வழி யென்றும் பின்னதைப் பிழைக்கும்வழி யென்றும் மேலோர் செப்புவர். சாகும்வழி யென்றால் சாவுக்கே (மரணத்துக்கே) ஆளாகும் வழி.

பிழைக்கும்வழி யென்றால் செத்துப்பின் சாகாதவழி: இதை "செத்துப் பிழைக்கும் வழி" யென்று சொல்லுவர் யோகிகள்.

உலகிலுள்ள ஜனங்களெல்லாரும் "சாகத்தெரியாமல் சங்கடப்படுகிறார்கள்", என்பது உண்மையே. அப்படியே உலகத்தார் பிழைக்கத் தெரியாமல் பேரவாக் கொள்கிறார்கள். 'பேரவா" என்றால் பெருகுந்தன்மையதான "ஆசை." "விரிந்துரைமாண்ட" ஒடுக்கம் முத்தியைக்கொடுக்கும்; "குவிந்துரைமாண்ட" ஒடுக்கம் பிருத்புவைக் கொடுக்கும். இவ்விரண்டுக்கும் காரணமாயிருப்பது விரிதல், குவிதல். விரியுங் குவியுந் தன்மையுள்ள விடத்தில் ஒடுக்குந்தன்மையுமுண்டு.

ஆகையால் அகார உகாரம் ஒன்று சேர்ந்தால் அதன்பின் அனுஸ்வாரமான மகாரமும் கூடவேவரும். ஆகவே அ+உ+ம் என்பது ஓம் என்று சேர்ந்தொலிக்கும். இந்த ஒலியே "உயிரொலி"யென்றும் "பிரணவநாதம்" என்றும் சொல்லப்படும். இதுதான் ஓம் என்பதின் வாச்சியார்த்தம். "அ+உ+ம்=ஓம்" என்பது பதார்த்தம். ஓம்+அ(அமாத்ரை) = "ஓம்" என்பது வாச்சியார்த்தம்.

இந்த உண்மைகளை (தத்துவங்களை) உயிரின் லக்ஷண-லக்ஷியமறிந்து பிரயோக முறையால் அனுஷ்டித்தோர்சொல்லும் "பிரயோக முறை" யிது:—

"ஓம் எனச்சொல்வது பிரணவ மந்திரம்
ஓம் எனக்கொள்வது பிரணவப் பொருளையே
ஓம் எனக்காட்டு முறை விர்த்தி க்ஷய லயம்
ஓம் எனக்குறிப்பர் காட்டுக்குறி கடந்த காரணன்
[தன்னையே."

"விரிதல், குவிதல், ஒடுங்கல்" என்று நாம் மேலேயெடுத்துக்காட்டிய தொன்றையே "விருத்திக்ஷயலயம்" என்று சொல்லியுள்ளார்.

விரிதலுங் குவிதலுமா யிருப்பது விருத்திக்ஷயம். இதற்குச் சந்திரன் ஆதிதெய்விகமான அதிஷ்டான தேவதை. ஐம்பூதங்களாலான பிரபஞ்சாகாரமெல்லாம் ஆதிபூதம். "ஆங்காரி" அல்லது, அகங்காரம் அத்யாத்மா. ஓங்காரம் தானே (சமஷ்டிப்பிராணன் தானே) ஆங்காரம் அகங்காரம்=வியஷ்டிப்பிராணனும்) ஆகும். 'ஆங்காரி'யே 'ஐங்காரி'யாகும். இந்த 'ஐங்காரம்' தானே "பஞ்சீகரண விதியால்" பிரபஞ்சமெல்லாமாகவிரியும் குவியும். இதுதான் உயிரின் உண்மை:—

ஓங்காரி—the Ruling Principle of Life

"ஓங்காரியவள்தானே ஆங்காரியாயினள்
ஆங்காரியாகியே ஐவரைப்பெற்றெடுத்தாள்
ஆங்காரியமெல்லாம் ஐவர் தம் தொழிலாம்
ஆங்காரமழித்தாலது ஓங்காரமாமே."

இப்படியாக உயிரின் உண்மையை நிதரிசனமாக அறிந்தவர்க்கு "தத்துவதரிசி" யென்று பெயர். உண்மையுணர்ந்து சாக்ஷாத்காரமாய் உயிரின் தத்துவங்களைப் பிரித்தறியவல்லார்க்கு உயிர்ப்பயம் ஒருக்காலும் இல்லை. அவர்கள் தம் உயிரைத் தியாகமாகக் கொடுப்பார்கள்; பிறகு தானமாகப் பிராணபிக்ஷை பேற்றுப்பெறுவார்கள். முன்னதற்கு அதிஷ்டான தேவதை தியாகராஜர். பின்னதற்கு அதிஷ்டானதேவதை பிக்ஷாடனர். பிக்ஷாடனர் உயிர்ப்பிச்சைக்குக் கப்பரையேந்தி நிற்கிறாரேயன்றி ஊன்பிச்சைக்கல்ல. இவையெல்லாம் ஆதியாயுள்ள தத்துவங்கள் (உண்மைகள்). இந்த உண்மைகளே வியாதி வைத்தியங்களுக்

கும் காரணமாயிருக்கின்றன. இந்த உண்மைகளின் தோற்றம், பரிச்சின்னம், இவை மாறுபடுகின்றனவே யன்றி உண்மைக்கு உள்ளபடி ஒரு மாறுபாடும் உண்டாவதில்லை. மாறுபாடுண்டானால் அது உண்மையாகாது.

ஆதியைப் பூரணமாயறிந்தவனுக்கு வியாதியில்லை யென்பது நிச்சயம். ஆதிதத்துவங்களை யறியாக்காரணத்தினாலேயே வியாதியுண்டாகி மலிகின்றது. ஆதியென்பது உன்மனஸ் என்னும் உள்ளத்தைப்பற்றியது. "உன்மனஸுக்கு" உபாதி "உள்ளுடம்பு". ஜீவன் அறிவின் பேதாபேத விசேஷத்தால் நாலவஸ்தைகளுக்குட்பட்டவனாக விருக்கிறான். ஜாக்கிர, ஸ்வப்ன, சுஷுப்தி, துரியமெனுமவற்றில் முதல் மூன்றுக் குரியவன்:—

(1) பஹிர்ப்பிரஜ்ஞன்=பஹிர்முகப்பார்வையோடு கூடிய அறிவுடையவன்.

(2) அந்தர்ப்பிரஜ்ஞன்=அஹமுகப்பார்வையோடு கூடிய அறிவுடையவன்.

(3) பிரஜ்ஞானகனன்.—அவித்யாசுகமனுபவிக்கும் அறிவுடையவன்.

(1) முதலவன் ஸ்தூல உபாதியோடு கூடினவன்: ஜாக்ராவஸ்தையுள்ளவன்.

(2) இரண்டாமவன் சூக்ஷ்ம உபாதியோடு கூடினவன்: ஸ்வப்னாவஸ்தையுள்ளவன்.

(3) மூன்றாமவன் காரண உபாதியோடு கூடினவன்: சுஷுப்தி (நித்ரை) அவஸ்தையுள்ளவன்.

இப்படியாக மூன்றவஸ்தைக்கும் மூன்று தேகம் உபாதியாக விருக்க, நாலாவது அவஸ்தைக்குரியவனான

(4) துரியன்=சரீரத்திரயங்களுக்கும் அபிமானியான ஜீவனை ஆச்ரயித்து தேஹாதீதனாய் எல்லாத்தேஹங்களிலும் வியாபித்து சுகஸ்வரூபனாய் விளங்குகிறான்.

இவன் தான் தன்வந்தரி யென்று சொல்லுமவன். பாற்கடலிலிருந்து அமிர்த கலசத்தைக் கையிலேந்திக்கொண்டு வெளிவந்தவன்.

இந்த தன்வந்தரி தான் எல்லா வைத்திய முறைகளுக்கும் அதிகாரி. தான் சுகஸ்வரூபியாதலால் தன் கையில் அமிர்த கலசமேந்திக் கொண்டுவெளிவந்தான்.

மிருத்யுவை (மரணத்தை)ப் போக்குவதொன்றெதுவோ அது அமிருதம்.

தேஹத்துக்குண்டாகும் வியாதி யெல்லாம் "விருத்தி, க்ஷய, லயம்" என்கிற தேஹதாபம் மூன்றுக்குள் அடங்கும்.

தாதுவிருத்தியால் தேஹத்துக்கு வீரியவிர்த்தியுண்டாகும்.

தாதுக்ஷயத்தால் தேஹத்துக்கு வீரியக் குறைவுண்டாகும்.

தாதுலயத்தால் தேஹத்துக்கு மரணமுண்டாகும்.

தாதுவென்றால் 'மூலம்' 'வேர்' என்றுஅருத்தம். தேஹம் தரித்திருப்பதற்கு மூலகாரணமாய், தேஹவிருக்ஷத்துக்கு வேர்போல் இருப்பது வாயுவினியக்கம். ஆதலால் அதற்கு "தாது" என்னும் பேர் வந்தது. அந்தவாயு நடமாடும் ஆகாசத்துக்கு (இட்டத்துக்கு) 'நாடி' யென்று பேர்.

அந்த நாடியின் ஓட்டம் மூவகைத்தாம். ஒன்று பாம்பு ஊருவதுபோல் நகர்ந்து செல்லும், அதற்கு சிலேஷ்மநாடி யென்று பேர். மற்றொன்று தவளைநடையொத்துத் தத்திக் குதிக்கும். அதற்குப் பித்தநாடி யென்று பேர். வேறொன்று குக்குடம்போல் (கோழி நடையொத்து) நடமாடும். அதற்கு வாதநாடி யென்று பேர். வாத பித்த சிலேஷ்மம் என்கிற இந்த மூன்றுவித நடமாட்டமும் ஒரு சீராக ஒத்திருக்கவேண்டும்: அதாவது வாதம் ஒன்றானால் பித்தம் அதிற்பாதியான அரையும், சிலேஷ்மம் காலுமாயிருக்கவேண்டும்.

இந்த மூன்று நாடிகளிலும் முக்கியமானது வாதநாடியே. இந்த வாதநாடியை வாயுதாரணை, அமுததாரணை யென்கிற தாரணைவித்திபெற்ற யோகிகள் "குக்குடாயநம:" வென்று மிகவும் தூக்கியோட்டுவர். ஓட்டமிகுந்த அதை மீட்டும் பிடித்துக் கட்டுவர். கட்டினகட்டவிழ்த்துப் பின்னும் சூந்யமாக விட்டொழிப்பர்.

வாயுபூரகத்தால் வாதநாடியைத் தூக்கியோட்டுவர். அப்பொழுது அது குக்குடம்போற் சிறிது ஆகாசத்திற் பறக்குந்தன்மை வாய்ந்ததா யிருக்கும்.

பறக்குமந்நாடியை வாயுகும்பகத்தால் மீட்டும் கட்டுவர். அப்பொழுது அது தோகைவிரித்தாடும் மயில்போல் நடமாடும்.

பிறகு வாயுரேசகத்தால் வாதநாடியின் நடமாட்டம்ஒடுங்க ஆடியோய்ந்தமயிலன்ன அமர்ந்திருப்பர்.

இவையெல்லாம் "மலக்கட்டும்" "ஜலக்கட்டும்" என்கிற சிக்கல் முக்கல் வியாதிகளுக்கு இடங்கொடுக்காது செய்யவேண்டும். மலக்கட்டும் ஜலக்கட்டும் நேரிட்டால் வியாதிக் கிடங் கொடுக்குமென்பது நிச்சயம்.

வாதம் கட்டுக்கடங்காது சீறினால் மலத்தில் ஒடுங்கும். வாயுவொடுங்கின மலம் விஷமாக மாறிக் குடலில் சிக்கும். மலச்சிக்கலுண்டானால் மூலச் சூடு புகைந்தெரியும். இந்த தூமாக்னியால் பித்தம் அதிகரிக்கும்.

பித்தாதிக்கத்தினால் பித்தநாடிசீறினால் அது தவளைபோல் தத்திக் குதித்து ஜலத்தில் ஒடுங்கும்.

பித்தம் ஒடுங்கப்பெற்ற ஜலம் மேகநீராகி மூடுபனிபோல் நாடி நரம்புகளில் ஜலத்தைக் கட்டும்.

நாடி நரம்புகளில் ஜலக்கட்டுண்டானால் திமிர்வாதம் என்கிற உஷ்ணசந்நியுண்டாகி நீராவியந்திரத்தின் குழாய்களிலடைபட்ட ஆவியின் சக்தியானது யந்திரத்தை முடுக்கி யோடச் செய்வதுபோல, தேஹத்தினுட் பரவியுள்ள நாடி நரம்புகளில் பிரவேசித்து "ஓட்டம், நாட்டம், ஒடுக்கம்" முதலிய அங்கசேஷ்டைகளைச் செய்விக்கும்.

இதற்குத்தான் சந்நிபாதசுரம் என்றும் பித்தவாதசுரம் என்றும் சொல்வது. நாடி நரம்புகளில் தாக்கிய மேகசூடானது அந்தர்பிரவேசமாயின்றி பஹிர்பிரவேசமாய் தோல்களின் வழியே கொப்புளமாகப் புறப்பட்டு வெளி வந்தால், அப்பொழுது அதற்கு வசூரி யென்றும் அம்மையென்றும் பெருவாரிக் காய்ச்சலென்றும் பேர். இவையெல்லாம் தேஹத்திலே மல-ஜலச் சிக்கல்களா லுண்டாகும் கொதிப்பு அல்லது புளிப்பு, (fermentation) நொதிப்பு, காரணமாக உண்டாவதால் இவைகளுக்கெல்லாம் 'Zymotic diseases'—நொதிப்பு காரணமாயுண்டாகும் பெருவாரிக்காய்ச்சல்கள் என்று பேர். இந்த வியாதிகள் தேஹத்தின் உள்ளும் புறம்பும் மலஜலச்சிக்கலினா லுண்டாகும்அசுத்தங்கள் அதிகமாவதினா, லுண்டாகிறது; அந்த அசுத்தாதிக்கத்தினால் கொதிப்பு (fermentation) உண்டாக, அதிலிருந்து புளிப்பு, நுரைப்பு முதலியவற்றை யுண்டுபண்ணும் விஷசுரங்கள் நேர்ந்து, நொதிப்பினால் வாதம்சீறி பைத்திய சைத்தியங்களையுண்டுபண்ணிப் பிராணனை வதைக்கும்.

பித்தாதிக்கம் பைத்தியம் எனப்படும்.
சீதாதிக்கம் சைத்தியம் எனப்படும்.

ரக்தத்திலுண்டாகும் கொதிப்புக்கே (fermentation) சுரம் என்று பேர். இந்த சுரம் தேஹசுகத்துக்கும் அவசியமேயாம். ஏனெனில் கொதிப்பின்றி விருத்தி – க்ஷயமில்லை. தேஹம் வளர்வதும் குறைவதும், பெருப்பதும் இளைப்பதும் "fermentation" என்று சொல்லும் ரக்தக்கொதிப்பினால்தான். இந்த ரக்தக் கொதிப்பை யுண்டுபண்ணும் அணுப்பிரமாண

ஜீவன்களுக்கு "Microzymas" என்று Beschamp என்னும் ப்ரெஞ்சு தேசத்து ஜீவ்ய தத்துவ சாஸ்திர மஹாபண்டிதர் அவைகளின் தத்துவத்தையறிந்து பெயரிட்டார்.

தேஹபோஷணைக்குக் காரணமாயிருப்பது இந்த mircrozymas என்னும் அணுப்பிரமாண ஜீவன்களே. இவைகள் மனிதனுடைய இரக்தத்திலும் தாதுவிலும் அளவில்லாமல் நிறைந்திருக்கின்றன. தேகம் சூடாயிருப்பதற்கும் இரக்தத்தினுஷ்ணத்திற்கும் காரணம் இந்த அணுப்பிரமாண ஜீவன்களே. இவை "அணோரணீயம்" என்ற சுருதிவாக்குக் கொத்தபடி அணுவிலும் அணுவான தேஹக்கூடுடையன வாயிருக்கின்றன. இந்ததேஹக்கூட்டின் விரிதல்குவிதலேகொதிப்புப் புளிப்புக்குக்காரணம். உபாதி ஸஹிதமான விரிதல் குவிதலையே 'Fermentation' என்றுசொல்வது. சுரமும் சந்நியு முண்டாவது இவைகளின் சேஷ்டையினாலே யே.

இவை தேஹத்தினுள்ளே தானேயிருந்து சுகதுக்கங்களிரண்டுக்கும் ஒக்கநேர்ந்த உண்மையான சாதனங்களாக உதவுகின்றன. இவற்றினுள் இருக்கும், அமிர்தரஸம் தானே "நஞ்சேயமுதும் அமுதே நஞ்சுமா"ச் செய்யும் சிவன்செயல்போல் சுகதுக்கமிரண்டுக்கும் காரணமாயிருக்கிறது.

நாடிதாரணையிற்றேறினவன் இவற்றின் உறுப்பமைப்பு இயல்புகளை (auatomy) யுள்ளபடி யுணர்ந்துய்வான். வாயுதாரணையில் தேறினவன் இவற்றின் விரிதல் குவிதலான (physiology) இயக்கசுபாவத்தை யுள்ளபடியுணர்ந்துய்வான்.

அங்கிதாரணை அமுததாரணையில் தேறினவன் மஹாமாரி முதலிய துர்த்தேவதைகளையு மடக்கும் தன்வந்திரியேயாகிறான்.

வசூரி, அம்மை, பெருவாரி, பித்தவாதசுரம், சந்நிபாதம் முதலிய இவைகளுக்கு ஔஷதமுறையில் எதிர்மறை வைத்தியஞ் செய்வது கூடாது. மஹமாரியை சக்திரூபமாகத் தியானஞ்செய்து பக்தியோகத்தால் பிராணதாரணை செய்து பிழைத்தால் பிழைக்கலாமேயன்றி ஔஷதப் பிரயோகம் இவைக்குகூடாதென்று தடுக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில் உள்ளே படிந்துள்ள மலஜலச்சிக்கலை வெளிப்படுத்தி தேஹத்தைச் சுத்திசெய்வதே இந்நோய்களின் நோக்கமாம். அதற்கு இடையூறு அதிகமானால் தேஹத்தை உள்ளூறவிருந்து குடைந்துசின்னபின்னப்படுத்திவிடும்.

பித்தம் சீறினால் ஜலத்தைக் கட்டுமென்று சொன்னோம். ஜலம் கட்டுப்பட்டால் அது விஷ நீராகும். ஜலக்கட்டு சிலேஷ்மத்தை விருத்தி செய்யும்.

சிலேஷ்மகாடியதிகரித்தால் இரக்தம் குளிர்ந்துபோய் கபம் கட்டும். கபக்கட்டு உயிரையேகட்டும். சிலேஷ்மம் சீறினால் கபத்தைக் கட்டும். கபக்கட்டு நாடி நரம்புகளை யடைக்கும். நாடியோட்டம் குன்றினால் பிராணவோட்டம் குறையும். பிராணன் ஒடுங்க தேஹத்துக்கு மாணமே சம்பவிக்கும். இதற்கெல்லாம் பரம நிவாரணமாயுள்ளது "பிராணாயாமம்."

பிராணயாமம் என்பது வாசிவசமாம். வாசிவசம் பிரணவோபாசனையாலும், 'வாசிவா' என்கிற ஹம்ஸமந்திர அஜ்பஸித்தியினாலும் பலிக்கும்.

இது பஞ்சாக்ஷர உபதேசம் பெற்று உபாஸியாகாரஸித்தி பெற்றவர்களுக்கு இலகுவில்பலிக்கும். அவர்கள் எலும்பையும் உருவாக்குவார்கள்.

திருஞான சம்பந்தர் "அங்கம்பூம்பாவை" என்கிற அதிர்சயமான அருள்விளையாட்டுச் செய்தது இந்தப் பஞ்சாக்ஷரசித்தியினாலுண்டான வாசிவச விசேஷத்தாலேயாம்.

அங்கலிங்கஜங்கம (உபாஸக உபாஸிப ஐக்கிய) உண்மையை யுணர்ந்தவர்கள் பஞ்சாக்ஷரஸித்திபெற்றவர்களாவார்கள். அங்கலிங்கஜங்கம

ஞானத்தின் அபரோக்ஷானுபூதியினால் "மும் மூன்று மொன்றாகி ஒன்றேயொன்பதுவாகும் உன்னருமை நிருத்தமென்ன!" என்றபடி நிரதி சயானந்த அபரோக்ஷானுபூதி பெற்றவர்கள் "எல்லாம் வல்லவித்தர்களாய்" உலகத்தின் சுக துக்கங்களைப் பொறுத்துக்கொண்டு அவற்றில் ஒட்டியும் ஒட்டாது விளையாடிக்கொண்டு விள ங்குவர். அவர்கள் விபூதி மாத்திரத்தினாலே எல்லா ஆதிவியாதிகளையும் சொஸ்தம் செய்ய வல்லவர்களாவார்கள். இதற்குச் சாதகசாதன மாயிருப்பதொன்றே. அது புறத்தில் 'சுத்தம்' என்றும் அகத்தில் 'சூந்நியம்' என்றும் இரண்டு க்கும் மேலான காரணத்தில் "சுபாவம்" என் றும், சரீரத்திரியங்களுக்கும் அபிமானியான ஜீவஸ்தானமாம் யோகஸம்யமத்தில் (அபி மான) "ஒழிவு" என்றும், சாக்ஷியதத்தில் "அதீ தம்" என்றும் சொல்லப்படும்.

ஆகவே "சுத்தம்- சூந்நியம்- சுபாவம்" மூன் றும் சுகதுக்கங்களை யனுபவிப்பதற்குச் சாதன ங்களாகவும், "(அபிமான) ஒழிவு," அவையிர ண்டுக்கும் சாதகமாகவும், இவைகளுக்கெல்லாம் மேலாய் சாக்ஷி-பதத்தில் அதீதமாய் நிற்பது சாத் தியம் அல்லது ஸித்தி யென்றும் சொல்லப் படும். ஓம் தத்ஸத்.

ஆகையால் "அங்கம் பூம்பாவை"யாம் அற்புத மியற்றவல்லோன் ஸ்தூலத்திலே அகம்புறமிர ண்டிலும் அழுக்காறற்ற சுத்தனாகவும், சூக்ஷ்ம த்திலே அகம்புறமிரண்டிலும் பற்றற்ற சங்கல் பவிகல்ப சூந்நியனாகவும், காரணத்திலே தானே தானாய்த் தன்மயமாய் நிற்கும் (ஆத்ம)சுபாவம் வாய்ந்தவனாகவும், தேஹத்திரியங்களுக்கு மப் பாலே அபிமான-ஸ்தலத்தில் அபிமானம் ஒழி ந்த ஒழிவுள்ளவனாகவும், சாக்ஷியத்திலே இவைக்கெல்லாம் அதீதமாய் நின்றுபார்க்கும் 'தீர்க்க தரிசன வீத்தி' யென்று சொல்லும் சக்தி வாய்ந்தவனாகவு மிருக்கவேண்டுமென்பது ஏற்படலாயிற்று.

[சமீபகாலத்திலே அன்பிலேபிறந்து அன்பிலே வளர்ந்ததோர் கண்மணிதானும் சந்நிபாதசுரத்தால் பீடிக்கப்பட்டிருந்த காலத்தில் அசுர சுபாவ மிகுந்த அவள் புக்ககத்தோர் அக்குழந்தையைப் பெற்றோரி டம் அனுப்பாமல் அதற்குசங்காதோஷமென்று சொ ல்லி, அன்பாய் வளர்த்த அக்குழந்தையை அந்த அவ ஸ்தையில் ஒரு அறையில் விட்டுப் பூட்டிவைத்ததாகக் கேள்விப்பட்டதனால், மனங்கொதித்து, அறியாமை காரணமாகவும் அசுரபாவமிகுதியினாலும் செய்ததா கும் அக்கொடுமை சகியாது, அன்பிற்பிறந்து அபி மானத்தால் உருக்கொண்ட "அனுதாபசக்தி"யின் மிகுதியால் உண்டான "ஸம்யமஸித்தி"யில் அக்கஷ் டங்களையெல்லாம் தானே தானையளாயிருந்தனுபவி த்த விசேஷத்தாலும், அப்பொழுது அக்குழந்தை யைப் பார்க்கவும் சரிப்படாதபடி நேர்ந்த விபரீதங் களினால் 'அங்கம் பூம்பாவை"த் திருவிளையாட்டை ஆதிபூத, ஆதிதெய்விக, அத்யாத்மக ஞானத்தோடு தரிசிக்கநேரிட்டதாலுமுண்டான உள்ளனுபவத்தைக் கொண்டு லோகாக்ஷார்த்தம் இது எழுதப்பட்டது.

## Easy Lessons on Economics.

### குடிவாழ்க்கை.

V பாடம். 1-ம் பாகம்.

வேலையின் பயன்.

வேலையின் பயன் மூன்றுவித மெனலாம்.

1. ஜடவஸ்துக்களை தம்முடைய சுகத்திற் கும் அநுபோகத்திற்கும் உபயோகப் படும் படி செய்தல் தொழிலின் முதற் பயனாகும். இது யாவரும் அறிந்ததே யாகையால் அதைத் திரும்பவும் நிரூபித்தல் அவசியமன்று.

2. செல்வ விருத்தி விஷயத்தில் பயனுண் டாகும்படி மனிதர்களுக்கு கல்வியையும் பயிற் சியையும் உண்டாக்குதலாகும். பலவித உபா த்தியாயர்கள், ஜனங்களுடைய உண்மையான விருத்தியை நாடி வேலைசெய்யும் உத்தியோகஸ் தர்கள், பிரயோஜனப்படக் கூடிய புத்தியைப் போதிக்கும் சக்தியையுடைய தர்மோபதேசி கள், பத்திராதிபர்கள், தத்வபோதனை செய்

யும் குருக்கள், மனதின் சல்லியத்தையும், சரீரத்திலுள்ள வியாதியையும் நீக்கும் வைத்தியர்கள், கைத்தொழில் வேலைகளை போதிப்பவர்கள், இன்னும் இவ்வகள் போன்ற தொழிலைச் செய்கிறவர் களெல்லோரும் செய்யும் வேலையானது, மனிதருடைய தேக வலிமைக்கும், மனப்பயிற்சிக்கும் உதவும் வரையில் இரண்டாவது பயனுகும். கற்போருடைய வேலையும் கற்பிப்போருடைய வேலையுடன் ஒத்துவராவிடின் கல்வியினுல் பயனென்று முண்டாகாதாகையால், கைக்கு வரும் பிரயோஜனத்தின் ஒரு காரணமாகக் கற்போருடைய வேலையும் அங்கிகரிக்கத் தக்க பயனுள்ளதே யாகும்.

3. இவ்விதப் பயன்களைத்தவிர வேலைக்கு வேறு விதமான பயனென்றுண்டு. மேற்கூறிய இருவகைப் பயன்களும் ஏறக்குறைய நிலைபெற்றவை யெனலாம். ஜடப்பொருள்களுக்கும் மனிதருக்கும் அமைக்கிற குணங்கள் அமைந்த க்ஷணத்திலேயே மாறுவனவல்ல. பருத்தி ஆடையானல், அவ்வாடை சிறிது காலங் கழிந்த பின்புதான் பிரயோஜன மற்றதாகும். அப்படியே ஒரு தொழிலைக் கற்றவன் ஜீவனுள்ள வரையில் அதைச் செய்து செல்வ விருத்தியைச் செய்யலாம். அவன்விஷயத்தில் நேரிட்ட பிரயாசையின் பயன் அவனிடத்தில் நிலைத்து அவனுயுள்வரையில் நிற்கின்றது. ஆனல் நாம் இப்பொழுது கவனிக்கப் புகுந்தது அப்போதப்போதே நசிக்கும் தன்மையது. பாடகன் செய்யும் வேலையின் பயன் தற்கால சுகமே யாகும். கானம், நடனம், பிரசங்கம் முதலியவை போன்றவைகள் பிரத்தியக்ஷமாய் நீடித்து நிற்கும் காரியத்தைச் செய்வதில்லை. சங்கிதம் கேட்கும்பொழுது சுகத்தையும் ஆநந்தத்தையும் கொடுப்பது மல்லாமல், மனே வியாதியை யகற்றி அதன் சேஷ்ட்டையைப் போக்கி நீடித்து நிற்கும் பயனையும் ஒருக்கால் கொடுக்கவும் கூடும்; ஆயினும் தற்கால சுகமே சங்கீதம் போன்றவற்றின் முக்கியமான உத்தேசமாகும்.

ஓர் தேசத்திலுள்ள சேனைகள் செய்யும் தொழிலும் இத்தன்மையதே என்று கூறலாம். சத்துருக்களினின்று தேசத்தைக் காப்பவர்களால், ஜடப்பொருள்கள் அநுபவயோக்கியங் கொண்ட பொருள்களாகவாவது, மனிதர் குணவான்களாகவாவது மாற்ற முடியாது. சட்ட நிரூபணக் காரர்களும், நியாய வாதிகளும் நியாயாதிபதிகளும் இவ்விதத் தொழிலையே பெரும்பான்மையாகச் செய்கின்றனர்கள். அவர்களுக்குரிய வேலைகளால் செல்வவிருத்திக்கு நேரடியான சாதகமில்லை யென்றும் கூறலாம். சண்டை சச்சரவு களில்லாமல் செய்வதால் ஜடப்பொருளாவது மனிதனுவது மேன்மையைப் பெறுதல் இல்லை.

வியாபாரிகள் சாமான்களை வேண்டு மிடத்திற்குச் சேரும்படி செய்கிறவர்களாகையால், அவர்களுடைய தொழிலானது முதலிற் கூறப்பட்ட பயனைத் தருவதெனலாம். அவர்களால் பொருள்கள் வேண்டிய இடத்தைப் போய்ச் சேருகின்றன. நமக்குவேண்டிய கோதுமை வடநாட்டில் உண்டாகின்றது. அவ்விடத்திலேயே அது இருந்தால் நமக்குப் பயன்படாது. அதை நம்முடைய கைக்குவரும்படி செய்பவர்கள் செய்யும் வேலையை ஸ்திரமான பிரயோஜனத்தைத் தராத தொழிலென்பது சரியாகாது.

மேற்குறித்த தொழிலின் பேதங்களைக் கொண்டு முதலிரண்டு தொழில்களை மேலானவை யென்றும், மற்றது கீழானதென்றும் நாம் கூறுவதாக நினைக்கலாகாது. மூன்றுவது முதலிரண்டைவிட மிகப் பிரயோஜனமுள்ள தென்று பலர் வாதிப்பார்கள். கிறிஸ்துவப் பாதிரிமார்களும், ஹிந்து வைதீகர்களும், பாடகர்களும் நியாயவாதிகளும் செய்யும் தொழில் செல்வ விஷயத்தில் ஒரு தன்மையுள்ளதுதான். இவர்

கள் படும் சிரமத்தினால் அவரவர்களுக்கு திரவிய லாபமும் பிறருக்குத் திரவிய நஷ்டமுமே யல்லாது நாட்டின் செல்வம் பெருகவிடமில்லை. இத்தொழிலாளிக ளெல்லோரும் தங்கள் தொழிலை நிறுத்தி வேலையின்றி யிருப்பாராயின் அதனால் செல்வக் குறைவுண்டாவதில்லை. ஆனால் மற்றத்தொழிலாளிகளெல்லோரும் அவரவர்கள் தொழிலை நிறுத்தி வேலையின்றி யிருப்பாராயினும், எவ்வித காரணத்தினாலாவது அவர்கள் தொழில் க்ஷீணகதியடைந்தாலும், தேசத்தின் செல்வம் குறைந்து அனைவரும் கஷ்டப்பட வேண்டியதாகும். கொஞ்ச காலத்திற்குமுன் மழைக் குறைவினால் உண்டான பஞ்சகாலத்தில் உழுது பயிர் செய்வோர்களிற் பலர் உணவின்றி மாண்டுபோகவே அதனால் பலவிடங்களில் நிலம் பயிர்செய்யப் படாமல் தரிசாகக் கிடந்தது. அதனால் ராஜ்யத்திற்கு விசேஷமான திரவிய நஷ்டமுண்டாயிற்று.

ஐரோப்பிய ஜாதிகளில் அனேக தேசத்தார் சண்டையையே முக்கியமான தொழிலாகக் கொண்டு மிருகங்களைப்போல் நாகரீகமின்றி யிருந்தபோது, பாதிரிமார் கல்விப் பொருளை நசித்துப் போகாமல் காத்தும், விருத்தி செய்தும், மனிதனது இயற்கையான குணங்களை மாற்றியும், தெய்வ பக்தியை போதித்தும், மோக்ஷமென்று வேறொரு உலகமுண்டென்றும் தீச் செய்கைகளுக்கு அங்கு தண்டனை யுண்டென்றும், ஒவ்வொரு மனிதனும் மற்றவனை தன்னைப்போல் எண்ணி இரக்கத்துடனும் நியாயத்துடனும் நடத்தாவிடில் ஈசன் கோபமூட்டப் படுவாரென்றும், பலதர்மங்களை அம் மனிதர்களின் மனதில் பதியும்படி செய்தும், அவர்கள் சண்டையை நிறுத்தி அமைதியையும் சமாதானத்தையும் கடைப்பிடித்து பூமியைப் பயிரிட்டு பலதொழில்களை நடத்தும்படி போதித்தும் தேசத்தின் செல்வவிருத்திக்குக் காரணமா யிருந்தனர்—பாதிரிமார் என்ற வகுப்பினர். இவ்விதமாக ஒருகாலத்தில் பாதிரிமார் தேசத்தின் செல்வ விருத்திக்கு இன்றியமையாத சாதகமா யிருந்தனரென்பது உண்மையே.

இப்பொழுதும் பாதிரிமார் நாகரீகமற்ற ஜனங்களால் பரவி யிருக்கப்பட்ட தேசங்களுக்குச் சென்று அங்குள்ளவர்களுக்கு கிருஸ்துமத போதனையுடன், சீர்திருத்தத்தையும், நாகரீகத்தையும் உண்டுசெய்து அதனால் செல்வ விருத்திக்கு உதவி செய்கின்றனர். நமது நாட்டிலும் சிற்சில விடங்களில் இப் பாதிரிமார்கள் தச்சுவேலை, செங்கல் வேலை, துணி நெய்தல் முதலிய தொழில்களை கிருஸ்து மதத்திற் பிரவேசித்த ஏழைகளுக்குக் கற்பித்து வருகின்றனர். இவர்கள் தங்களுக்குரிய வேலையாகிய மதபோதனையை மாத்திரம் செய்து வருவாராயின், அதனால் மனிதவர்க்கத்திற்கு விலையில்லாத பேறுண்டாகலாமென வைத்துக் கொண்டாலும், தேச செல்வ விருத்திக்கு அவர்கள் பாடுபடுவது காரணமாகமாட்டாது. பரம்பொருளினது நித்தியமாகிய பதவியின் பெருமையை யவர்கள் நம் தேசவாசிகளுக்கு அளிப்பது உண்மையாகவே பலித்தாலும் இகத்தில் நம் தேசவாசிகளின் செல்வப் பெருக்குக்கு அவர்களுடைய ஞான மார்க்கம் பயனற்றதேயாகும்.

பூர்வ காலத்தில் ரிஷிகள் என்று கூறப்படும் இந்துக்களின் குருமார்கள், ஒரு காலத்தில் கல்வி கற்று இன்றி பமையாதவர்களாய் இந்துக்களுடைய செல்வ விருத்திக்குக் காரணமாயிருந்தனர். வேதத்தை ஓதுதல், ஓதுவித்தலென்ற வேலையை மாத்திரம் செய்யாமல் மழையின் காலத்தையும் வரவையும், விதைக்கக் கிரமமான பருவத்தையும், துஷ்ட மிருகங்களைக் கொல்லுவதற்கு வேண்டிய சாதகங்களையும் ஜனங்களுக்கு போதித்தனர். தவிர இவர்கள் தேசத்தின் ஜனங்களுக்கு, தங்கள் நடவடிக்கையினால் ஒரு திருஷ்டாந்தமாக நின்று சீர்திருத்தத்தையும் திரவிய விருத்தியையும் செய்தனரென்றே கூறப்படுகின்றது. ஆயினும் தற்காலத்திலுள்ள வைதீகர்களின் உதவி நம் தேச ஜனங்களுக்கு பரலோகத்திலுயர்ந்த பதவியை யடைவதற்கு எவ்வளவு அவசியமாயினும், தேச செல்வப் பெருக்கத்திற்கு சாதகமொன்றுமில்லை.

T. C. வேங்கடரமணய்யர்.

## Sita-A Tale of Hindu Domestic Life.
## சீதா அல்லது இல்லறவாழ்க்கை.

:-(o)-:

### 35 - வது அதிகாரம்.

இராமச்சந்திர அய்யர் புறப்பட்டுப் போனவர் காமேசுவரய்யருக்கு ஒருமாதம் வரையில் கடித மொன்றும் எழுதவில்லை. இராமச்சந்திர அய்யர் தாய்க்கு இராமச்சந்திர அய்யர் விஷயமாய் விசாரம் அதிகமாகி விட்டது. அவளுக்கு அங்கே இருக்க பிரியமில்லை. காமாக்ஷியம்மாளும் லக்ஷ்மியம்மாளும் எங்கே யிருக்கிறார்களென்பதை நாமிதுவரையில் சொல்லவில்லை. காமேசுவரய்யர் இராமச்சந்திரய்ய ரோடு வந்து சேர்ந்ததும் லக்ஷ்மியம்மாளும் காமேசு வரய்யருடைய சுவீகாரப் பிள்ளையும் கூடவேவந்து விட்டார்கள். ஆனால் காமாக்ஷியம்மாள் மட்டும் பூவ ரசநல்லூரிலேயே இருந்து விட்டாள். அவளுக்கு இராமச்சந்திரய்யரையும் அவர் தாயையும் கண்டால் ஆகாது. ஆதலால் அவள் வரமாட்டேனென்று சொல்லிவிட்டாள். ஆனால் இராமச்சந்திரய்யருக்கு அவள் வருவதில் ஆக்ஷேபனை யொன்றுமில்லை. அவரும் அவளை வரும்படி வருந்தி யழைத்தார். காமாக்ஷியம்மாள் தன் கெட்ட எண்ணத்தாலேயே, போகாமலிருந்து விட்டாள்.

காமாக்ஷியம்மாளுக்கு தமக்கை பெண்ணை காவாலி சுப்பய்யனுக்குக் கொடுத்திருந்தது. காமேசுவரய்யர் பூவரசநல்லூரிலிருந்தவரையில் காவாலி சுப்பய் யன் வீட்டிற்கு சாமான்கள் ஒன்றும் விலைக்கு வாங்க வேண்டியதில்லை. அவன் காமேசுவரய்யரை எமாற்றி பணம்பறித்துக் கொண்டிருந்தான். காமாக்ஷியம்மாள் காமேசுவரய்யர் வீட்டிலிருந்து சுப் பய்யன் வீட்டிற்கு சாமானை தாட்டிக்கொண்டிருந் தாள். காமாக்ஷியம்மாள் காவாலி சுப்பய்யன் வீட் டில் சகல காரியங்களையும் பார்த்துவந்தாள், உண்ட வீட்டிற்கிரண்டு நினைப்பதற்கு யாரையாவது திரு ஷ்டாந்தமாகச் சொல்ல வேண்டுமானால், காமாக்ஷியம் மாளைத் தான் முன்னாடி சொல்லவேண்டும். இவளை சாப்பாடு போட்டுக் காப்பாற்றுகிறது முழுவதும் காமேசுவரய்யராயிருக்க இவள் அபிமானம் முழு வதும் காவாலி சுப்பய்யன் குடும்பத்திலேயே இருந் தது. காமேசுவரய்யர் இராமசந்திரய்யரிடம் போய் சேர்ந்துகொண்டபிறகு காமாக்ஷியம்மாள் சுப்பய்யன் வீட்டிலேயே இருக்கவேண்டியிருந்தது. சுப்பய்யன் பெண்டாட்டிக்குக் குடும்பத்தின் கஷ்டம் அப்போது தான் தெரிந்தது. காமாக்ஷியம்மாள் சகல காரியங் களை செய்தும் அவளுக்கு வைது கொண்டே சோறு போட்டாள். காமாக்ஷியம்மாள் இந்த ரோசம் பொறு க்கக் கூடாமல், காவேரியில் ஓர் மடுவில்போய் விழு ந்து இறந்து விட்டாள். காமேசுவரய்யர் இராமசந் திரன் எல்லோரும் இந்த சாமாசாரத்தைக் கேட்ட பிறகு, வருத்தப்பட்டு, அவளுக்கு செய்யவேண்டி யதை செய்து முடித்தார்கள். சுப்பய்யன் பெண் சாதி அதைக்கூட கவனிக்கவில்லை. காமாக்ஷியம் மாள் காரியம் இப்படி முடிந்தது.

காமேசுவரய்யர் லக்ஷ்மியம்மாளையும் தன் சுவீ காரப்பிள்ளையையும், ஊரிலேயே விட்டு விட்டு, பார் வதி யம்மாளையும் ஒரு பரிசாரகனையும் கூட்டிக் கொண்டு இராமசந்திரய்யரைத்தேட புறப்பட்டார். இராமசந்திரய்யரைத் தேடப்போன காமேசுவரய்யர் வெகு நாளாகியும் வாராததால், அவரைத் தேடுவதற்கு லக்ஷ்மியம்மாளும் அவள் குமாரனும் புறப்பட்டார் கள். கூடத் துணைக்கு லக்ஷ்மியம்மாளின் தம்பி லக்ஷ்மண சாஸ்திரிகளென்ற ஓர் சாஸ்திரம் படித் தவரைக் கூட்டிக்கொண்டு சென்றார்கள். இராம சந்திரய்யர் இன்னும் வரக்காணோமென்பதைக் கேட்டு விசாரப்பட்டுக் கொண்டிருந்த இராமச்சந் திரய்யர் மாமனார் சுப்பராமய்யரும் அவர் ஸம்ஸாரம் பாகீரதியம்மாளும், தங்களுக்குத் துணையாக தன் சின்னப்பெண் மீனாக்ஷியையும், அவள் புருஷன் வெங்கடாசலத்தையும் கூட்டிக்கொண்டு புறப்பட் டார்கள். இராமச்சந்திரய்யர் புறப்பட்டுப்போய் ஒரு மாசத்துக்கு மேலாகியும் சுப்பராமய்யருக்கு உடனே புறப்பட சரிப்படவில்லை. மேலும் அவர் சின்னப் பெண் மீனாக்ஷிக்கு அந்த வருஷம்தான் தலை தீபா வளி.

சின்ன மாப்பிள்ளை வெங்கடாசலத்துக்கு மாலைக் கண் அதாவது மாலைவேளையில் கண்தெரியாது. பக லில்தான் தெரியும். இவன் கலியாணத்தின் போதே இந்த நாள் வழக்கத்தை யனுசரித்துப் பெண்டாட்டி யோடு பேசுவதை வழக்கமாக செய்துவிட்டான். இவ ன்மாமனார் வீடு வந்ததும் பெண்டாட்டி ஓடிவந்து இவனை விஜாரிக்காம லிருக்கமாட்டாள். இவன்பெண் டாட்டியும் ஸீதாவுக்கு தங்கையாதலால் அழகுக்கு கேழ்க்கவும் வேண்டுமோ. அதிலும் மெட்டிசலங்கை

யெல்லாம் போட்டுக்கொண்டு வரும்போது. அவள் மெட்டி அவளுடைய பாலியத்தை சுட்டிக் காட்டி, அவள் நடக்கும்போதெல்லாம் பதினெட்டு பதினெட்டு என்று ஓசையிடும். தீபாவளிக்கு அழைக்கப் பட்ட வெங்கடாசலம் ஊரைவிட்டு வெகுதாமதமாக புறப்பட்டபடியால் மாமனார் வீட்டுக்கு அஸ்தமித்த வுடன் வந்துசேர்ந்தான். இவனுக்கு மாலைக்கண் என்பது ஒருவருக்கும்தெரியாது. வந்தவன்உள்ளேபோக கண்தெரியாமல் வெளிதிண்ணையி லுட்கார்ந்து விட்டான்.

சுப்பாமய்யர் தன் வீட்டில் புதிதாய் ஓர் ஆட்டுக்குட்டி வாங்கியிருந்தார். அதற்கு சலங்கைகள் கட்டி ரேழியில் கட்டப்பட் டிருந்தது. அது புதிதாக வாங்கப்பட்டபடியால் வந்தவர்களையெல்லாம் முட்டிக் கொண்டிருந்தது. இந்த ஆடு சற்று நேரத்திற் கொரு தரம் சலங்கையை குலுக்கிக்கொண்டு நின்றது. வெங்கிடாசலமய்யர் பார்த்தார். ஓகோ நமது பெண் சாதிதான் தனியாக ரேழியில் நம்மைப்பார்க்க வந்திருக்கிறாளென்று எண்ணி, மெள்ள ரேழிக்குப்போய் சப்தம்வந்தஇடத்தில் 'சென்று, ஏண்டி மீனாக்ஷி நான் வந்திருக்கிறதுஉனக்கு இப்போதுதான் தெரிந்ததோ' என்று சொல்வதற்குள் ஆடு ஒருமுட்டுமுட்டி அவரை கீழேதள்ளிவிட்டது. வெங்கடாசலமய்யர் ஓகோநாம் மோசம் போனோமே யென்று மெள்ள எழுந்திருந்து பழயபடி திண்ணையிலேயேயுட்கார்ந்தார். அன்றுவிடியிற்காலம் எண்ணெய்தேய்த்துக் கொண்டு வெங்கடாசலமய்யர் தீபாவளி ஸ்னானம் பண்ணும்பொழுது பகீரதியம்மாள் தன் பெண்ணை புண்ணுக்கு புருஷனுக்கு கொண்டுபோய்க் கொடுப்பதுபோல போய் க்ஷேமசமாசாரம் விசாரித்துவிட்டு வரச்சொன்னாள். பெண் சலங்கையெல்லாம் போட்டுக்கொண்டு ஓசையோடு உள்ளேபோனாள். வெங்கடாசலமய்யர் இந்த சப்தத்தை கேட்டவுடனே திகிலடைந்தார். தன் மனதிற்குள் அய்யோ பாவிபசங்கள் யாரோ ஆட்டை அவிழ்த்துவிட்டார்களே என்று திகிலடைந் திருக்கும் போதே சப்தம் கிட்டவந்தது. உடனே வெங்கடாசலமய்யர் முட்டி விட்டா லென்ன செய்கிற தென்று ஓங்கி ஒரு அடி அடித்தார். பெண் புண்ணுக்கை அப்படியே போட்டுவிட்டு கோ வென்று கதறிக் கொண்டு போனாள்.

உடனே வெங்கடாசலமய்யர் அய்யோ மோசம் போனோமே யென்று வருத்தப்பட்டார். பிறகு எல்லோரும் வெடியவில்லை யென்று சற்று தூங்க ஆரம்பித்தார்கள். வெங்கடாசலமய்யரும் ஓர் உள்ளில் தூங்கினார். சற்று நேரத்திற்கெல்லாம் வெளியே கால் அலம்பப்போகப் புறப்பட்டு, வழி தெரியாமல், மாமியார் படுத்திருந்த அறையில்போய் அவள்காலில் இடறி கீழேவிழுந்தார். பாகீரதியம்மாள் விழித்துக் கொண்டு மாப்பிள்ளே இதென்னவென்று கேழ்க்கவும், வெங்கடாசலமய்யர் ஓகோ மாமியார் காலே யல்லவா இடறி விட்டோமென்று கண்டு அதைகாட்டிக் கொள்ளாமல் அவள் இரண்டு கால்களையும் பிடித்துக்கொண்டு, மாமி உங்கள் பெண்ணை அடித்து விட்டேனென்று கோபித்துக்கொள்ளக் கூடாது என்றார். இப்படி ஒவ்வொரு சமயத்திலும் குட்டு வெளியாகாமல் காப்பாற்றுவது வெங்கடாசலமய்யருக்கு வெகு கஷ்டமாயிருந்தது. அவர் வெகு பேரிடம் வைத்யம் பார்த்துக்கொண்டு கடைசியில் அந்த வியாதியினின்று விடுவித்துக்கொண்டார். (இன்னும்வரும்.)

எஸ். ராமஸ்வாமிஐயர்.

## To Our Readers & Subscribers.

## விவேகசிந்தாமணியை வாங்கி வாசிக்கும் நண்பர்களுக்கு.

விவேகசிந்தாமணி யேற்பட்டு 18-வருஷங்களாய் விட்டன. 18-வது வால்யமும் சென்ற மார்ச்சு மாசத்தோடு முடிந்து போயிற்று. இந்த ஏப்ரல் மாசத்து சஞ்சிகையோடு 19-வது வருஷத்து வால்யம் ஆரம்பமாகிறது. இது ஆரம்பமானது முதல் அறிவைப் பரவச்செய்யும் நோக்கம் ஒன்றையே பெரிதாக வெண்ணி அதற்காக வேண்டிய ஏற்பாடுகளையே முனைந்து நின்று செய்து வந்திருக்கிறோம். அறிவு என்றால் என்ன?

"அறிவுடையார் எல்லா முடையார்
அறிவிலார் என்னுடையரேனு மிலர்."

என்று திருவள்ளுவநாயனார் செப்பியிருக்கிறார்.

இந்த விவேகசிந்தாமணிப் பத்திரிகையை நாம் வெளிக்கொண்டு வந்த பொழுது (1892-ம் வருஷத்தில்) வேறு மாதாந்தரப் பத்திரிகைகளே யில்லாமலிருந்தன. இது துவக்கப்பட்ட பின் தோன்றிமறைந்த

பத்திரிகைகள் எத்தனையோ! இதன் பேரையொட்டியும், இதன் நடையை ஒட்டியும், இதன் வழியையொட்டியும் வெளிவந்து நடைபெற்று வரும் பத்திரிகைகள் பலவுள.

விவேகசிந்தாமணி வேதாந்த பரிபாஷை மிகுந்ததாக விருக்கிறதென்று சிலர் குறை கூறுகிறார்கள். குறையுள்ள மனது குறைகூறிக் கொண்டே தானிருக்கும். "மனிதன் அனுபவிக்கப் பிறந்த ஆத்மன். 'ஆத்மன்" என்றால் "அறிவுடையான்" என்று. அருத்தம்: வேறொன்று மில்லை.

தனு கரண புவன போகங்கள் என்று சொல்லும் அனுபோகத்துக் குரிய நான்கு சாதனங்களில்,

தனு: என்பது தேஹம். அம்பு விடுதற்கு வில் எப்படி யுதவுகிறதோ அப்படி ஸ கல்ப மாத்திரத்தினாலுண்டான இவ்வுலகத் தோற்றங்களை (பிரபஞ்சத்தை) யுணருவதற்கு ஸங்கல்ப சக்திக்கு இருப்பிடமான தேஹம் காரண மாயிருக்கிறது.

கரணம்: என்பது மனம் முதலான இந்திரியங்கள்: வில்லில் பூட்டிய நாண் (கயிறு, சூத்திரம்) எப்படி வில்லுக்கு பிகுவையும், அதில் பூட்டப்பட்ட அம்புக்கு விசையையும் கொடுக்கிறதோ, அப்படிப்போல, மனேந்திரியாதி கரணங்கள் "தபஸ்" என்கிற "நாணேற்றும்" காரணத்தால் தேஹத்துக்கு வலுவையும் காரியசித்தியையும்), சங்கல்ப சக்திக்கு விசையையும் கொடுக்கிறது.

புவனம்: என்பது லோகங்கள். இவை ஆந்தரமாகவும் பாஹியமாகவும் உள்ளன. அம்புபோன்ற கூர்மையுள்ள அறிவு (ஆத்மபுத்தி) பாய்ந்து (ஊடுருவி) செல்வதற் கிசைந்த இடமாய் இருக்கிறது. ஆகாச வெளியில் அம்பு பாய்ந்தாலன்றி லக்ஷியத்தைப்போய்த் தாக்காது. அஃதேபோல ஆந்தர-பாஹிய லோகங்களில் (லோக காரியமான லௌகிக விசாரங்களில்) புத்தி பிரவிர்த்தித்தாலன்றி அது நித்யாநித்ய வஸ்து விவேகம் என்னும் உண்மையாகிய லக்ஷியத்திற்போய்த் தாக்காது.

போகம்: நித்யாநித்ய வஸ்துவிவேகத்தால் பொய்யைத்தள்ளி மெய்யைத்தழுவி உண்மையனுபவம் உணர்தலே போகம். இன்ப துன்ப சுகதுக்க ரூபமான 'துவந்துவ' போகங்களெல்லாம் இந்த உண்மையான ஏகபோகத்துக்கு அனுகுண மாயிருக்குங் காரணத்தால் அநுபோகங்கள் எனப்படும்.

இப்படியுள்ள தனு, கரண, புவன, போகம் என்றுள்ள நான்கு சாதனங்களையும் முறைப்படி அனுஷ்டித்து தர்மார்த்த காம மோக்ஷ மென்கிற சாதகமாம் பயனைப்பெறுதலே அறிவின் தொழிலாம். இப்படிச் சாதன சாதகசித்தி பெற்று சங்கல்ப மாத்திரத்தால் எல்லாம் சாதிக்க வல்லராதல் சாத்திய லக்ஷணமாம்.

இந்த லக்ஷணமமைந்து லக்ஷியத்திற் சிந்தை லயித்தவர் ஸித்தபுருஷர்கள் எனப்படுவர்.

அப்படிப்பட்ட ஸித்தபுருஷர்களின் அடிமையாகி அவர்களுக்குத் தொண்டுபுரிதலே தொழிலாக் கொண்ட சில மஹான்களுதவியால் இந்த விவேக சிந்தாமணி யானது இகபரசாதனானுகூல மாகவும், பராபர சாதகார்த்த மாகவும், லௌகீக, வைதிக, உத்யோக, மஹாயோக மார்க்கங்களை, சுருதியுக்தி யனுபவங்களுக்கேற்க, உண்மைவழிப்பட்டு உள்ளாராய்ச்சி செய்து ஸ்வானுபவத்தால் சாத்தியமென்று கண்டதைப் பரோபகாரார்த்தம் பல்லோரறியப் பஹிரங்கப்படுத்தப் பேருதவி புரிவதாயிருக்கிறது.

மூக்கரையன் கதையாக எல்லோரையும் மூக்கறுத்துக் கொள்ளும்படி செய்யவேண்டு மென்கிற எண்ணம் லவலேசமு மில்லையால், "உண்மைக்கொரு நாளும் கேடுவராது" என்கிற சித்தாந்தத்தினால் "மெய்யே வெல்லும் பொய்யல்ல" என்னும் வேத வாக்கியத்தை யனுஷ்டித்து, "ஸத்தியம்வத: தர்மம் சர" என்ற சுருதி வாக்கியப்படி, இக்கலிகாலத்திலும், ஸத்ஜனர் உண்மை யுபதேசம் செய்து தர்ம்ம வழிகாட்டிச் சித்தமாயிருக்கிறார்களென்பதை நிரூபிக்க, இப்பத்திரிகையை "அறிவைப் பரவசெய்ய" வென்றே நடத்திவருகிறோம். இதன் சந்தாதொகையை காலந்தாழ்க்காமல் உடனுக்குடனே யனுப்ப வேண்டிய கடமை யொன்றைத்தவிர வேறு திரவியஸகாயம் யாரிடத்தும் நாம் எதிர்பார்க்கவில்லை. ஆதலால் பத்திரிகையை வாங்கி வருவோர் காலந்தாழ்க்காமலும் சந்தா பாக்கிவிழாமலும் உடனுக்குடனே அனுப்பி விடவேணுமாய் எல்லாருக்கும் விண்ணப்பம் செய்து விநய பூர்வமாய்க் கேட்டுக்கொள்கிறோம்.

**சந்தா பாக்கி தாரர்களுக்கு அறிவிப்பு.**—சந்தா பாக்கியை நிறுத்தி வைத்துக்கொண்டு வல்லடி வழக்குரைத்துச் சண்டித்தனம் செய்கிற சாகஸக்காரர்களை "யத்பாவம் தத்பவதி" யென்கிற தர்ம சட்டத்துக்காளாக விட்டிருப்பதைவிட வேறு கடின தண்டனை யில்லையானாலும், ஆசிரம தர்மத்தையும், வியவஹார ஞாயத்தையும் உத்தேசித்து எல்லாரையும் சரி சமனாகப் பாவித்து பாக்கியுள்ள சந்தா தொகைக்கு விவேகசிந்தாமணியை வி. பி. போஸ்டில் அனுப்பி விடுவோம். சந்தா பாக்கியுள்ளவர்கள் பெரிய மனது வைத்து பாக்கித்தொகையைச் செலுத்திவிடக் கோறுகிறோம்.

பத்திரிகை நிறுத்தியும் பழம்பாக்கியைச் செலுத்தாதவர்கள் பேர்களை அவரவர்கள் கொடுக்க வேண்டிய பாக்கித் தொகைகளையும் காட்டி வெளியிடுவதுடன் பணத்தை வசூல் செய்வதற்கான வேறு ஏற்பாடுகளும் செய்யப்படும்..

——:-:——

# "O! MY GOD GRACIOUS."
## PRAISES AND PRAYERS OF A PARENT-HEART
### IN A SUPREME CRISIS OF LIFE ON EARTH.

"Our theism is the purification of the human mind."

"I may be allowed to point out, that language is the slave of thought; Thought, to use the words of Kingsley, grows out of Morals; Morals out of Religion; and Religion is what we preach and also practice. In short, a people's literature is its life, it is what its daily life makes it."—*Sir Narayan chandravarkar* in the *Times* of *India* on the meaning of the tercentenary of the English Bible to Indians.

"It lives in the ear like music;" it is "part of the national mind"—Father Faber on the language of the English Bible.

## 'ஹே! தயாநிதே!"

### திருவருட் சிறப்பு
### பிரார்த்தனைக் கொத்து.

திருமயிலைக் கல்பகாம்பாள்ஸமேத
காபலீச்சுரர் முன் குறையிறந்தோதிய
**திருவருட் சிறப்பு விண்ணப்பம்.**

"தபஸிலனைவைத்துப் பூஜைபண்ணு"-குருவாக்கு.
"மனிதரில் நான் ராஜாவாயிருக்கிறேன்"-பகவான்
"சக்திக்குவித்து தனதுபசாந்தமே"—திருமந்திரம்.
"களவாளுலுங் கற்றுமற."—பழமொழி.

Wire: "M—here, suffering typhoid, start immediately"

"குழந்தை சென்ற ஐந்து நாளாக மூலைப்பாலில் தான் உயிரைவைத்துக்கொண்டிருக்கிருள்." கடிதம்.

பெற்றமனம் பிற்ருகிச் செய்யு முறையீடு.

"ஐயகோ! தெய்விகமே அநியாயங்கண்டாயே
வையகத்தோ ரேசவுன்னை வாதுமிகச் செய்தாயே
மெய்யகத்தோர் மெய்விதிர்ப்ப மாருட்டந்தான்போட்டுப்
பொய்யகத்தோர்பொய்மலியப்போராட்டங்கொண்டாயே!"

### தோத்திரம்.

நமச்சிவாயவாழ்க நாதன்ருள் வாழ்க! [வாழ்க!
இமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான்ருள்
கோகழி ஆண்ட குருமணிதன் ருள்வாழ்க!
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் ருள்வாழ்க!
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க!
வேகங்கெடுத்தாண்ட வேந்தன் அடிவெல்க!
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க!
புறத்தார்க்குச்சே யோன்றன் பூங்கழல்கள் வெல்க!
கரங்குவி வாருண்மகிழும் கோன்கழல்கள் வெல்க!
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன்கழல் வெல்க!
ஈசனடிபோற்றி எந்தையடி போற்றி!
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி!
நேயத்தே நின்ற நிமலனடி போற்றி!
மாயப்பிறப் பறுக்கும் மன்னனடி போற்றி!
சீரார் பெருந்துறைத் தேவனடி போற்றி!
ஆராத இன்பம் அருளும் மலைபோற்றி!

### முகவுரை.

சிவனவ னென்சிந்தையுள் நின்றவதனல்
அவனருளாலே அவன்ருள் வணங்கிச்
சிந்தைமகிழச் சகபுராணந் தன்னை
முந்தை வினைமுழுதும் ஓயவுரைப்பனியான்.

### திருவருட் சிந்தை.

ஆறுறுமாகியே ஐம்மூன்றுந் தானாகி
முன்னான்கு மூன்ரேடு மூவாறு மாகிநின்ருள்
மும்மூன்றும் ஒன்றபத்தாய் மண்டலங்கள் மூன்று
நாலே சிவபுரமாய் நன்மதில்கள் மூன்றுஞ்சூழ் [சூழ
வாசல்கள் நான்கோடு வாலைவித்தை யம்பிகையாய்
தேவியவள் தான்திகழும் திவ்யபுரந் தான்கண்டு
ஆவிநெக்கு நெக்குருக ஆனந்தம் மேற்கொண்டு
பாவனு பூஜையதால் பணண்டையதாம் வாசனைகள்
விருத்தியதே யாமொன்று விட்டொழித்து வாசனை [யைக்
கிருதகிருத்திய பூசனையால் திருவருட்பா லுண் [டேனே!

### சக்திவேலாயுத! சரண்.

ஆவிநெக்கு நெக்குருக அன்புமிகுந் தென்புருகவே
யிதயபுண்டரமலரிலெழ ஷண்முகரஸவாறுமுக
ஸம்க்ரமண ஸ்ரீகண்டர் பூர்ணோதாத்துதித்
துமையன் பிழுக்கவே அசரீரி ஈசரீரியாகி
யீரண்டஸ்வரூபிரூப மிவைக்கிலக் காகியே
யனலுண்டமெழுகு பேலாதாரவாதேய நேரொக்கவே
யொருரூப மாய்நிற்கு மெழில்பொழி யென்னீசனே
சரணம் சரணமென்றுன் பாதமே யடைந்தேன்
சரவணபவ வென்னைக் காத்தருளாயே!
சக்திவேலாயுத சமயந்தப்பாமலே
கைகொடுத் தென்னை நீ காத்தருள்வாயே!
ஓம் சரவணபவ நமோ நமோம்!
ஓம்தத்ஸத் இதி நமோ நமோம்.

### சகபுராணம்.

(சூதஸம்ஹிதை.)

I.

பூதமெனச் சொல்லியவெச் சீவருக்கும்
போகமொடு மோட்சத்தை யளித்துக்காக்கும்
நீதியதாற் பரசிவனே பூதபாலன்;
நிகிலர்க்கு மாந்தானுய் நின்றெப்போதும்
ஏதமற வங்கங்கே யேவலாலே
யீசுவரன் ஈசான னிர்ண்மோவன்;
ஓதியவா யாவையுமே பாலிக்கின்ற
ஒழுக்கத்தாற் பரமசிவன் பர்த்தாவாவன்.

II.

அகிலசரா சரசகமு மழிப்பதாலே
யச்சிவனே யர்த்தாவென் றறையலாவன் ;
சகலமுமே யபரோக்ஷ மாகவென்றுஞ்
சற்றும்விடா தறிவதனுற் பரமன்றானே,
நிகழுமகா ரிஷியாவன்; என்றுமெங்கும்
நிறைஞான வடிவாக நிகழ்வதாலே,
திகழ்தேவ னெனலாவன் ; பொய்யாயெல்லாஞ்
சிருஷ்டிக்குந் திறமையின லீன்றேனவன்.

III.

பூரணமாய்ப் பரமசிவன் வியாபித்தெங்கும்
புரையறவே நிறைந்ததனல் விஷ்ணுவாவன் ;
காரியமாம் ஜகமெல்லாம் நசித்தபோதுங்
காரணமாம் பரமசிவன் நசியாதத்தாற்
பூரணமாம் அவன்என்றும் நாசமில்லான் ;
புகன்றசடா சடமான சகத்துக்கெல்லாங்
காரணமாம் பரமசிவன் நாதனன
கணக்கதனுற் பிரபுவாகச் செப்பலாவன்.

IV

எங்குநிறைந் தனைத்தையுமே யேவாநின்ற
ஈசனுயிர்க் குயிரான பான்மையாலே
பங்கமிலாப் பிராணனெனப் பகரலாவன்;
பரிச்சேத மேதொன்று மின்றியென்றுந்
துங்கசுக வடிவாகித் துவிதமின்றித்
துரியவடி வாதலினற் பூமானுவன்;
மங்குசரீ ரங்களிடை யான்மாவாக
மன்னுவதாற் புமானெனவும் புகலலாவன்.

V

வேடன் அவதாரம்.

“மங்குசரீ ரங்களிடை யான்மாவாக
மன்னுவதாற் புமானெனவே” பேர்பெற்றெந்தை
கங்குநிற முடையவனுக் களங்கமாகத்
துன்னுமொரு சிந்தையினற் றாசேபோலும்
பங்கமுறு நடுநிலைவிட் டொழுகுவோனுய்
மன்னுமொருபூங்காவிற் கெட்டொழுகு காட்டானை
யெங்குஞ்சென் றேதமிலாப்பயிரதனை யழிக்கக்கண்டு
துன்னுமாமதயானை வேட்டையாடத் தோன்றினன்
[றரணியில்

“சிவராத்திரி”—யன்றே.

VI

பூபாலன் அவதாரம்.

தரணியிலே வந்துதித்த வேடன்தானும்
பரிசிலனுய்ப் பழிபாவங்கட் கஞ்சானுகி,
வியனுலகில் மாந்தர்களைக் காக்கவென்று
விண்ணுலக மேவியவன் பின்னுந்தோன்றி
மண்ணிலொரு பூபால னுகவந்து
மாட்சியுடன் தரணியெலாம் ஆண்டுவந்தான்,
காட்சியுடன் சாட்சியுமாய் நின்றவப்பன்
கண்ணப்பன் கைப்பிடித்து நில்லென்றான்முன்!

VII

தபசீலன் அவதாரம்.

பின்னுமொரு அவஸரத்திற் புமானேயாகி
பின்னமுறு தரையில்வந் தவதரித்தான்
தபசீலன் தத்துவனுய் தர்ம்மவானுய்த்
தத்பதத்தின் வாச்சியத்திற் கிலக்ஷியமாய்
அசிபதமே யானவந்த கல்பகாம்பாள்
நசியாத திருமயிலா யவதரித்து
அதிபதமா மஹேசுவரனைப் பூஜைசெய்து
நிஜபதமாம் நின்மலனை யடைந்த வூரில்.

VIII

தபஸிலன் அவதாரம்.

தற்பரனே பின்னுமிந்தத் தரையில்வந்து
தபஸிலனுய்ப் புமானுகி யவதரித்து
மாசிலான் தானேயாகி மன்றிலாடும்
ஈசனுப் பேர்புனைந் திரக்கமின்றிப்
பேதமிகச் செய்துபல பரீக்ஷையாலே
“பாககதியும் இதுவன்றி வேறன்றென்று” †
பற்பலவாம் சோதனையால் பரிந்துகாட்டி
சிற்கனமாய்ச் சிற்சுகமாய் நின்றான்றானே!

IX

சங்கரனே சாசுவதன்.

பக்தர்கட்கா மிடரையெலா மரிப்பதாலே
பரம்சிவன் அரனுவன்; மற்றுமன்னேன்
நித்தமுமே யனைத்துக்கு முள்ளாய்நின்று
நீதியுற வேவுதலால் அந்தரியாமி:
அத்தனவன் அனைவர்க்கும் நிஜமாம்ரூபம்
ஆகிநிறைந் திருப்பதனல் ஆன்மாவாவான்:
சத்தியமாய்ச் சந்ததமு மிருப்பதாலே
சங்கரனே சாசுவத னுவனென்றும்.

X

சிவபூஜை=அபரோக்ஷஸித்தி.

“பக்தர்கட்கா மிடரையெலா மரிப்பதாலே
பரமசிவன் தானே (யென்) அரனுமாகி”
அகங்கார மமகாரங்க ளறவேபோக்கி;
“நித்தமுமே யனைத்துக்கு முள்ளாய்நின்று
நீதியுற வேவுமவன் அந்தர்யாமி”—
“சருவர்க்குஞ் சந்ததமு மான்மாவாகச்
சாட்சாத்தாய் அகம்அகமென் றிலங்குஞ்சோதி—
அரியசிவன் அபரோக்ஷ மென்னுளானுன்.”

XI

(1) துவஜாரோகணம்.

அபரோக்ஷ மாயென்னுள் விளங்குஞ்சோதி
நிர்விகற்பத் தாலென்றன் நிலையுங்காட்டி
நீதியுடன் அதைக்கடக்கும் வழியுங்காட்டி
நிலைகுலையா நிர்விகற்ப நிலையில்நீயும்
நீதியுடன் அநீதியெலா மொன்றேயென்று
ஓங்கார வடிவாகி யுள்ளுக்குள்ளாய்
உள்-புறமென் றேதியவோர் பேதந்தீர்ந்து
எவ்வெதற்குஞ் சாட்சியதா யெல்லாமாகி—

† “அயமாத்மா பிரஹ்மம்” என்பதைக் குறிப்பிட்டு.

XII

## (2) பிரஹ்மோற்சவம்.

அல்லவுமாம், அற்புதமாம் சாந்தியாலே
உபசாந்தியுட்புகுந்து சித்தனாகி
சிற்கனமாய்ச் சின்மயமாய்ச் சிந்தைவிட்டுச்
சிந்தையிலாச் சிந்தையினாற் சிந்திப்பாயென்
றார்ப்புறமுள்ளதோர் மந்தைவெளி மூலையில்
நாற்சந்தி கூடுமோர் நல்லிடந்தன்னில்,
மறைந்திருந் தென்னைச் சண்டைக்கிழுப்பான்
மாயாவியாமந்தக் கிருஷ்ணனை யேவி—

XIII.

## (3) மாயாஜாலம்—பூதவாஹனம்.

மருவிலாச் சதாநந்தன் மனையேடுகௌவி
ஈம்சக்தி முந்நூற் றிருபத்தைந்தாலே
ஏகமாம் என்னைமிக வேகமாக்கடிந்து
நாகஸர்ப்பம் போலவே சீறிச்சினந்து
நாட்டார்கள் நகைக்கவே சந்திக்கிழுத்து
ஹூம்காரம் போட்டென்னை யுருட்டிமருட்டி
உண்மையாம் தியாகராஜன் சந்நிதிக்கிழுத்து
உண்மையாய் மனையேடு போனதைச்சொல்லி—

XIV.

## (4) மாயாகாரியம்.—புருஷாமிருகவாகனம்.

உள்மர்மம் சொல்லாது வம்புக்கிழுத்து
கள்ளத்தனஞ்செய்தென் கண்ணில்மண் போட்டு
கௌவினதோர் மனையேட்டைக் கற்பனையாலொளி
உள்ளத்தையுள்ளபடி சொல்லாது மறைக்கவே [த்து
மாயாவிகிருஷ்ணனை மந்தைவெளி யிருந்தேவி
கள்ளத்தனமாகவே காரியத்தை முடிக்கவென்று
குள்ளத்தனஞ்செய்த வாமனைப் பின்னேவி
ஈம்சக்திமுந்நூற் றிருப்பத்தைந்தாலென்னை
முன்னிலும்பின்னதிக மாகவே மருட்டிட—

XV.

## (5) மாயையின்கூத்து—விருஷபவாகனம்.

என்னிலும் "அத்தன் அனைவர்க்கு நிஜமாம்
ரூபமதாகி நிறைந்திருப்பதனால்" ஆன்மாவாமவன்
அந்தர்யாமியா யென்னுளேநிறைந்து பின்னமில்
[சோதியாம்
பெருந்துறையப்பனாப் உள்ளத்தைச்சொல்ல உளவு
[கண்டுணர்ந்து,—
சுந்தரன்பரவையா ரெனச்சொல்லு மிருவர்க்கும்
சாக்ஷியாயிருந்துமுன் னுளவுசொன் னதுபோல்
ஈசுவரன் மாயையுமா யிருந்திந்த லீலையை
நடத்துறா னென்றுமே யுள்ளத்துணர்ந்து—

XVI.

## (5-7) மாயையைவென்று நிஜபதாஸ்திரம் பேறல் : ஆனைவாகனம்—இரதாரோகணம்.

உண்மைப்பக்தியா லூக்கமிகக் கொண்டு
ஈம்சக்தி முந்நூற் றிருபத்தைந்தாலே
ஈசுவரன் தன்னை யெதிர்த்துநான் வெல்லவும்,—
வில்லாலெதிர்த்த விடல்வீர னுக்கப்போ
பாசுபதாஸ்திரம் பரிந்துமே யளித்தவன்,
புட்டுக்குமண் சுமந்து பிரம்படி பட்டவன்,
சொல்லா லெதிர்த்தவென் சொல்லுக்குவந்து
"நிஜபத" மாமோர் நின்மலாஸ்திரத்தை
வாக்கியாதீத வாக்கியமாத் தொடுத்து
'துவம்பத' - 'தத்பத' - 'அசிபதங்' - கடந்தநீ
'அதிபத'வுண்மையை அமர்ந்திருந் துணர்ந்து
சாந்திபதத்திலே சத்துருவை வென்றுபின்
உபசாந்தத்தாலே யுண்மையுரு வாகியே
'நிஜபத'த்தென்றும் நிலைத்திரு வென்றான்.

XVII

## (8) துரியப்பரி வேட்டை.

நிஜபதமைந்தையும் நேர்நின்று கண்டநான்
'யதார்த்தம்' 'ரகஸியம்' 'அறுதி'யென்றோதும்
மூவகை யுண்மையை முத்தியிற்கண்டு
சக்தியுருவானவம் மூன்றையு மொன்றாப்
பக்தியினாலே பரிந்துமேற் கொண்டு
யுக்திக்கு மப்பாலாய் யுகாந்தரவெளியில்
சக்திக்கு மேலாய் சாந்தியாதீதமாய்
புத்திக்குமெட்டாத பூரணமாம் வெளியில்
சக்திக்குலக்ஷியமா, ஞானவரம் பதுவாய்
எத்திக்குமொன்றாய் இலங்குமோர் மோனமே—

XVIII

## (9) நிஜபதாஸ்திரம் தொடுத்தல்.

லக்ஷியமாய்க் கொண்டுநான் நிஜபதாஸ்திரத்தை
லளிதையவள் கையேந்தும் கரும்புவில் தான்வாங்கி
விஜயதசமியிலே வில்லம்பு தொடுத்தாப்போல்
சிவராத்திரியன்றுநான் சிவபூஜை தான்முடித்து
நவராத்திரிமுதற்கொண்டு நான்செய்த பூஜாபலன்
அத்தனையுமுருவாகி அக்ஷரங்கள் தாமாக,
அக்ஷரத்துக்கப்பாலாம் ஆதிசிவன் பதம்பணிந்து
நாணேற்றித்வனிசெய்து நாமார்ச்சனைகள்செய்து
விண்ணேறி வானேறி வீணர்மனங்காணாத
கண்ணேறிக் கானேறிக் கைவல்யந்தானாகி
எண்ணேறிப் பறிக்கவொண்ணா ஏகாந்தவெளியில்
[தொங்கும்
மோனவுருவாமந்த மாம்பழத்தை † இலக்குவைத்து
நிஜபதாஸ்திரத்தையான் வில்வாங்கித் தொடுத்துவிட்
[டேன்.

---

† Compare:—

"அம்மாள் எனக்கொரு மாம்பழம் ஈன்றாள்
அதற்குத் தோலுமில்லை நாருமில்லை
கட்டியுமில்லை கொட்டையுமில்லை.
தின்னத் தின்ன ருசிக்கு மென்றாள்
தெவிட்டாத தேன் கட்டியென்றாள்."

### (10) தர்ம்மபிக்ஷைக் கிரத்தல்: பிட்சாடனர் திருக்கோலம்.

"விட்டேன் வெகு வேகமதாய்
வேணமட்டும் நாணிழுத்து
சுட்டேன் மிகுதாபமதைச்
சூந்நியம்விட்டுச் சுபாவமேறிப்
பட்டேன் வெகுபாடெல்லாம்
பாரில்வந்த தபஸிலனால்
கெட்டேன் மிகுமண்ணாசை
கெடுவான் செடுசிந்தையாலே."

பெண்ணாசை முன் விட்டேன்
பொன்னாசை பின் விட்டேன்
மண்ணாசை யவன்செயலால றவிட்டேன்
என்னாசை யறச்செய்த தபஸிலியை விட்டுளோற்குத்
தர்ம்மபிக்ஷையளியீரோ தரணியில்வாழ் மாந்தர்களே!

| | |
|---|---|
| வேதமாதாபிக்ஷைப்பிரதானம்: "ஸத்தியமேவஜெயதே நாந்ருதம்." | அசரீரவாக்:— "தர்மமேஜயம்." |

### பிட்சையாண்டவ ருபதேசம்.

"தர்ம்மமேஜய"மென்ற பீக்ஷைகேட்டேன்:
தரணியிலே கலிமுற்றுங்காலமாச்சு!
பரணியிலே யதிஷ்டானங் கூடலாச்சு!
அரணியிலே அக்கினியும் தோன்றலாச்சு!
ஆன்றாக்களீடேறு மார்க்கங் கேண்மின்:—
"ஆசையறுமின்கள் ஆசையறு மின்கள்
"ஈசனோடாயினு மாசையறுமின்கள்
"பிட்சாடானத்திலும் பேதமறுமின்கள்
"மாசுபடிந்த மனத்தினுறவறுமின்கள்
"தூசுபடிந்த தபசிலன்தயவை யரவினுறவெனவே
கண்டஞ்சியோடிப்பிழைமின்! பிழைமின்குழையீரே!

உண்டுநெத்துறங்கு வஞ்சகநெஞ்சினருள்ளம்போல் நீல
கண்டங்கறுத்துள்ளம்நடமாடிகாட்டியவழியிதுவே!
நஞ்சுண்டஞ்சுண்டான் நெஞ்சுண்டெஞ்சிய'துவுண்
பகர்சொல்லிதுவெனக் கண்டுண்டால்— [டான்
நிகர்சொல்லிலா நித்தமுத்த நின்மலசித்தராவீரே!

### (11) திருக்கலியாணமஹோற்சவம்: அல்லது, திருவருட்பேறு. வீடுபேறல் விண்ணப்பம்.

விட்டேனுன் ஆசையெல்லாம்
வீடுபெற வேண்டியம்மா!
வீடானவீடுபெற வேணமட்டும்
பாடுபட்டேன்!—பாடுபட்டுத்தேடிப்
பணத்தைச்சேமித்துவைக்குங்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்
திருக்கூத்தை:—பணமில்லான்
இவ்வுலகிற் பிணமென்று சொல்லக்கேட்டேன்:
பணத்தைமிகத்தேடி பாங்கியிலேபோட்டுவைத்தேன்.
குணத்தைமிகத்தேடிக் கும்பகங்கள் பலசெய்தேன்:
"ரேசகபூரக கும்பகங்கள்" செய்திடவே
"தாசுபோல்நிற்குந்" தலையென்ற துண்மையாச்சு!

### (12) உமாமஹேசுவரர் தரிசனம்— பந்தம்பறி யுற்சவம்.

பாங்கியில்போட்டபணம் பாழாகத்தான்போச்சு!
ராங்கியில் பட்டகர்வம் ராஜஸதீதோடேபோச்சு!
கைவல்யந் தான்வேண்டிக் கரபாத்திரசாமியானேன்
அர்நபூரணிவந்து அரும்பிச்சை யிட்டாள்காண்
லளிதையவள் முன்வந்து லளிதாலய மீன்றாள்
லளிதாலயத் துள்ளேயுண்டு சிந்தாமணிக்ரஹம்:
சிந்தாமணிக்ரஹத்தில் சிந்தையற்றுத் தபஸிருக்க
எந்தா யவள்தானும் சிந்தாமணிதந்து
சிந்தைமிகநோகவென்னைச்சிரிப்பாணிகண்டாள்காண்

### (13) ஆரோகண அவரோகணம்.

சிரிப்பாணிகண்டாலும் சீர்குலைய விடவில்லை!
ஊர்ப்பாடுபட்டுநீ யுண்மை யுணரவேண்டி
ஊரார்படும்பாட்டை யுன்னுள்ளேகாணென்று
தபஸிலனையேவியவள் தர்ம்மநிலை காட்டிவைத்தாள்
மாசிலையென்றுநான் மர்மத்தை வெளியிட்டேன்.
உள்ளத்தைச்சொன்னேனென் றுள்மர்மஞ்சாதித்துக்
கள்ளத்தனமாகவே கௌவினான் மனையேட்டை!
மனையேடுபோனாலும் மாட்சிகூடப் போகவில்லை!
பனையேடுமுறிந்தாலும் பதமெனக்குக் குலையவில்லை!
நினைவேடுநின்றாலும் நிமலன்சிந்தை குறையவில்லை!
முனையேடுகிழித்தாண்டான் †முத்திநிலைசித்தியிலே!

### (14) வருதியோ எம்பாவாய்!

### சேத்துப்பிழைத்த குழந்தைக்கு விண்ணப்பம்.

மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச்சுரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பி னுருத்திரபல்கணத்தார்க்கு
அட்டிட்டல் காண வருதியோ எம்பாவாய்!

### (15) பூர்ணமத-அர்ப்பணம்.

வருதியோ எம்பாவாய் வாழ்மதுரைக்கோட்டைகட் [டிச்
சுருதியோ டறுதியெல்லாஞ் சூக்குமையால் நீயுணரக்
கருதியோகருத்திலனென் றுன்னுள்ளமுணர்ந்ததோர்
உறுதியோ! கண்டிலனுன், கற்பகமே யர்ப்பணமீது [னக்கு!
பூர்ணமத-இதிசாந்தி:

ஓம்தத்ஸத்.

---

† சுந்தரமூர்த்தியடிகளைத் தடுத்தாள வேண்டித் திருவாரூர் அண்ணல் அவர் திருமணக்காலத்தில் முறியேடுகாட்டி அடிமைகோர, அவர் அதைக்கிழித்தெறிந்தும், அசல் வேறிருக்கிறதென்று சொல்லி அவரையடிமைகொண்டருளிய தியாகராஜப் பெருமான் உலகுய்யக்காட்டி நிற்கும் "கர்மபலத் தியாகமாம்" முத்தி நிலைச் சித்தியில்,—என்று கொள்க.

——:-:——

33

# THE VIVEKA CHINTA-MANI SERIES.

## PUBLISHED BY THE DIFFUSION OF KNOWLEDGE AGENCY.

---

"I hope you will be encouraged similarly to reprint other articles from your extremely useful and popular Magazine, some of which, as, for instance, KAMALAMBAL., are such as will do honour to a first-class Magazine of the kind in Europe."—Professor P. SUNDARAM PILLAY, M.A., F.M.U., F.R.H.S., RAO BAHADUR, in 1896.

"The Series is admirable: and when the history of Tamil literature comes to be written many years hence, you will occupy an hononred position, as one of its founders. I refer of course to modern Tamil literature."—*H.O.D. Hardinge, Esq, I.C.S.*

"It is a matter of course that an institution like this has a hard road to travel; for any publication which is not for amusement but endeavours to diffuse knowledge is not liable to pay its way. It ought to be supported however for the same reason that our Universities are.—*The Open Court, Chicago, U. S. A.*

Dr. Paul Carus. the Editor of the *Open Court* and the *Monist*, Chicago, in a private letter to Mr. C. V. Swaminathaiyer writes thus:—

"I need not repeat that your work of diffusing western knowledge, the wisdom of European *belles letters* as well as the popularised results of science among your people is of great importance and deserves not only the sympathy of every one who believes in progress, but also the assistrnce of the Government in whose interest it is to raise the standard of intelligence to the highest possible level."

"Dr. G. U. Pope has mentioned to me the Viveka Chintamani as an excellent publication and I shall be obliged if you will send it to me" ............L. C. INNESS, Esq. (retired Judge of the High Court, Madras).

*Dewan Bahadur P. Bajaratna Mudaliar C. I. E, Inspector General oj Registration (retired) writes*:—"I am glad to find that you are devoting your time and talents to spiritual investigation. I wish our young friends of the rising generation will devote some portion of their time to such enquiries."

*Guru-Bhakta-Kesari. Dewan Bahadur A. Ramachandra Iyer, Retired Chief-Judge of Mysore now at Kalady writes*—"I shall never forget the short conversation which I had with you in 1893 in Madras. I was much impressed by your energy and euthusiasm in the noble cause of making people enlightened and healthy. I note with pleasure that since 1900, you have been working in a new direction and that you are able to suppress your mind."

Mr. H. K. Beauchamp, C. I. E., late Editor of the *Madras Mail* wrote in 1898 as follows:—"Mr. Swaminatha Aiyar is not a mere theorist or Essayist: he has done much practical work in the encouragement of Vernacular Studies through his Diffusion of Knowledge Agency and by means of his excellently conducted periodical the *Viveka Chintamani*. He can therefore, be considered to have established a claim to make his voice heard in this matter."

Mr. A. E. Lawson, Editor of the, '*Madras Mail*" writes:—"I enclose a cutting about you which I published on the 28th instant (Cct. 1910.):—

"THE VIVEKA CHINTAMANI."—Mr. C. V. Swaminatha Iyer, the Editor of the monthly magazine, the *Viveka Chintamani*, has been working hard for the diffusion of knowledge and enlightenment amongst the masses, for which special purpose he has maintained an agency during the last twenty-five years. All this time he has been prominently associated with vernacular journalism in the Presidency. The *Viveka Chintamani*, which is eighteen years old, has done much in providing wholesome literature in Tamil, and several well-known writers have utilised the columns of its hospitable pages for this purpose. Tamil leaders will be much interested to learn that Mr. Swaminatha Iyer is bringing out a third edition of the late Mr. Rajam Iyer's famous Tamil novel, "Kamalambal" which is well-known for its excellent portraiture of modern Indian Society. Mr. Swaminatha Iyer, in recent years, has devoted himself to the investigation of religious and psychological problems, and those who are interested in these problems will find much in the issues of the *Viveka Chintamani* that will appeal to them.—*The Madras Mail.*

"*Marlborough House, Pall Mall, S. W. 28. July, 1900. Dear Sir,—I have submitted your letter and enclosures to the Prince of Wales. His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyer his best thanks for the copy of Verses which he has been good enough to transmit to him through you. Yours faithfully, Francis Knollys.*" (Now, Lord Knollys).

Miss Manning, the devoted Secretary of the National Indian Association, who had done so much to bring England & India together, & who visited the Editor of this Journal in his humble home in response to an invitation from himself & his wife, in a covering letter, says:—

"*I told the Private Secretary (to the Prince of Wales) that you were actively interested in the improvement of sanitation in Villages & Towns, and in Education. Pray remember me very kindly to your wife and keep your little girl in mind of her English friend.*"

